

# ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம்

## 22. வருந்தி வேண்டினால், வந்து நிற்பான்

“மாயையினின்று மீள்வதற்கு வழி என்ன?” என்று ஒரு சீடர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்டார்.

“மீளவேண்டும் என்று உண்மையில் விரும்பினால் ஆண்டவனே வழி காட்டுவான். விரும்புவது என்றால் வெறும் வாய்ப் பேச்சில் அல்ல. விடுபட வேண்டும் என்கிற ஆசை மேலிட்டு உள்ளம் கரைய வேண்டும். குழந்தைக்காகவும், மனைவிக்காகவும், பணத்துக்காகவும் படிக் கணக்கில் கண்ணீர் விட்டு அழுகிறோம். ஆனால் ஆண்டவனை அடைய வேண்டுமென்று யார் அப்படி அழுகிறார்கள்?”

“குழந்தை பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கும் வரையில் தாய் சமயலறையில் வேலை செய்து கொண்டுதான் இருப்பாள். விளையாட்டுப் போதுமாகப் போய், பொம்மைகளை எறிந்துவிட்டுக் குழந்தை கத்தி அழுகிறது. உடனே தாயார் தன் வேலையை விட்டு விட்டுக் குழந்தையண்டை ஓடுகிறாள். ஓடும் அவசரத்தில் சமையல் அறைச் சாமான்கள் உருண்டும் சிதறியும் போகும். அந்த மாதிரியே உள்ளம் உருகி அழும் பக்தனிடம் பகவதி ஓடி வருவாள்.”

“இந்தக் கலி காலத்தில் பெருந் தவம் வேண்டியதில்லை. மூன்று நாள் உண்மையாக விரும்பி தியானித்தால் போதும். மக்கள் ஈசுவரியின் அருளைப் பெறுவார்கள். பொய்யல்ல. மகனே! நீ அவளை அடைய, உண்மையில் தீவிரமாக விரும்பி மூன்று நாள் அழுது பார்! வெற்றி பெறுவாய். ‘பகவதி! எனக்கு நிலையான பக்தியை அருள்வாய், ஐயங்களை விரட்டித் துரத்து. உன்னை நான் எப்போதும் மறக்காமல் பார்த்துக் கொள். என் பாவத்தைத் துடைத்து விடு!’ என்று மூன்று நாள் உள்ளம் உருகிப் பிரார்த்தனை செய்து பார். பலனை நிச்சயமாக அடைவாய். பக்தியோடு முறையிட்டால் பயனில்லாமல் போகாது. சந்தேகம் ஏன்? என்னைப் பார், பார்த்து தைரியமடைவாயாக!” என்று சொன்னார் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

* * *

“அம்மா! எனக்குப் பசி வந்தவுடனே எழுப்பி விடு” என்கிறது குழந்தை. “குழந்தாய், பசியானால் அதுவே உன்னை எழுப்பி விடும்” என்கிறாள் தாயார். ஆண்டவனை அடைய வேண்டும் என்கிற பசி ஏற்பட்டால் யாரும் தட்டி எழுப்ப வேண்டியதில்லை. வழியும் சொல்லிக் காட்ட வேண்டியதில்லை.

தெருக் கூத்துகளில் இதை நன்றாக எடுத்துக் காட்டுகிறார்கள். முதலில் மத்தளங்கள் அடித்து பேர் இரைச்சல் கிளப்பி ‘கிருஷ்ணா! கிருஷ்ணா!’ என்று பலமாகக் கத்திச் சிலர் பாடுவார்கள். ஆனால் கிருஷ்ண வேஷம் தரித்தவன் தன்பாட்டுக்குத் திரைக்குப் பின் ஏதோ பேசிக்கொண்டும், சாப்பிட்டுக் கொண்டும் கவனியாமல் இருப்பான். பிறகு இரைச்சல் எல்லாம் நின்றுபோய் நாரதர் வீணை மீட்டி மெல்லிய குரலில் பாடி, “கிருஷ்ணா! வா!” என்பார். உடனே கண்ணன் துள்ளி எழுந்து அரங்க மேடையில் வந்து நிற்பான்.

வேஷமும் ஆரவாரமும் பயனில்லை. உண்மை பக்தர்களிடம்தான் ஆண்டவனுக்கு அபார அன்பு. இதைப் பாமரர்களும் உணரும்படி இந்தத் தெருக் கூத்து முறை நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

“பகவானே! ஆண்டவனே!” என்று வாயினால் சொல்லும் பிரார்த்தனை செல்லாது. உள்ளம் கரைந்தால் பேச்சு அடங்கிப் போகும். உண்மையாக பக்தன் அழும்போது ஈசுவரி கவனியாமல் இருக்க முடியாது. ஓடி வந்து நின்று அருள் புரிவாள்.

- 13-8



# நரஸூஸ்
# காபிதூள்

உங்கள் பிரியமுள்ள பானம்

## இப்பொழுது எங்கும் கிடைக்கும்

உயர்ந்த ரக பிளாண்டேஷன் பீபெரி, எக்ஸ்ட்ரா
போல்ட் காபிக் கொட்டைகளும்

7 பவுண்டு, 3 பவுண்டு, 1½ பவுண்டு, ½ பவுண்டு
சீல் வைத்த துணிப் பைகளில்
கிடைக்கும்.



**நரஸூஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட், சேலம்.**




முப்பது வயதுகூட நிரம்பாத போதிலும் அவள் வயது சென்றவளாயும் நோயாளியாகவுமே காணப்பட்டாள். பள்ளியிலும், கலாசாலையிலும் அவள் ஒரு வீராங்கனையாகத் திகழ்ந்தது அவள் சிநேகிதிகள் மட்டுமே அறிவர். பெரு மூச்சும் இரைப்புமாக அவள் தெருவோடு செல்வதைப் பார்த்த அன்னியர்கள் நம்பவில்லை. ஆனால் அவளது ஊளைச் சதை யெல்லாம் கரைந்து மறைந்த பின்னர் 10 வயது குறைந்து யௌவனத்துடன் காணப் பட்டாள்-அதன் ரகசியம்-"க்ருஷன்."

இயற்கையான அழகிய தோற்றத்தையும் யௌவனத்தின் சோபையும் பெரிதாகப் பாவிக்கும், ஆனால் ஊளைச் சதையினால் அவதிப்படும் ஒவ்வொரு ஸ்திரீயும் இவ்வார்த்தைகளை நன்கு கவனிக்க வேண்டும்.

க்ருஷனில் சேர்ந்துள்ள ஆறுவித இயற்கை லோக சத்துக்கள், சரீரத்தினுள், ரத்த ஓட்டத்திலிருந்து வடிக்கட்டப் பட்ட விஷங்களையும், ஜீர்ணத்திற்குப் பிறகுள்ள கழிவு பதார்த்தங்களையும் வெளித் தள்ள, அவயவங்களுக்கு உதவுவதன் மூலம் ஊளைச் சதையின் மூலகாரணத்தை எதிர்த்துப் போராடுகின்றன. கழிவு பதார்த்தங்களும் விஷப் பொருள்களும் அபரிமிதமாக ஒன்று சேரவிடப் பட்டால் உடம்பின் ரசாயனக் கலவை மூலம் கொழுப்பாக மாறுகின்றன. தொடர்ச்சியாகக் கொஞ்ச காலம் க்ருஷன் உட்கொண்டால் அது அதிகப்படியான பளுவைக் குறைத்து, மூத்திரக் காய்கள், ஈரல் குடல்கள் இவற்றின் இயற்கையான சலனத்தைத் தூண்டுகிறது. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. யௌவனத் தோற்றத்தைப் பெறுவதோடு யௌவன உணர்ச்சியையும் பெறுகிறீர்கள். அதாவது நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியை அடைகிறீர்கள். முதலில் ஒரு பாட்டில் வாங்குங்கள். உங்கள் கடைக்காரரிடமும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும். "க்ருஷன்" விலை ரூ. 1-10-0.

"க்ருஷன்" ஈ. க்ரிபித்ஸ் ஹ்யூஸ், கோ., லிட்., (மாஞ்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப் பட்டது. வினியோகஸ்தர்கள்: கார் அண்டு கம்பெனி, லிமிடெட், பம்பாய், கல்கத்தா, மதராஸ்.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

# சுதந்திர தின விழா விசேஷ விற்பனை!

ஆகஸ்டு 15 தேசிய சுதந்திர விழா கொண்டாட, புதிதாக வந்துள்ள ஸ்விஸ் லிவர் கடிகாரங்களை வாடிக்கைக்காரர்களுக்கு செப்டம்பர் 15 வரை, குறைந்த விலையில் விற்பனை செய்கிறோம். 15,17 ஜுவல் கடிகாரங்கள் 5ம், மற்றவை 3 வருஷ உத்தரவாதம் உள்ளவை. கடிகாரத்துடன் உத்தரவாதப் பத்திரம், அழகிய ஸ்ட்ராப், வெல்வெட் பெட்டி இவை இலவசமாக அளிக்கப்படும். பாக்கிங், தபால் செலவு, விற்பனை வரி இன்றி வி. பி. பி. யில் பெற்றுக் கொள்ளலாம்.





## இலவசப் பரிசுகள்

இரண்டு கடிகார ஆர்டர்ருக்கு ஒரு அமெரிக்கன் ப்ளாஸ்டிக் டார்ச் லைட்டோ, தங்க மூடி போட்ட அமெரிக்கன் பவுண்டன் பேனாவோ அளிக்கப்படும். மூன்று கடிகாரங்களுக்கு ஒரு பாக்கெட் வாட்சும், நான்கு கடிகாரங்களுக்கு ஒரு ஆபீஸ் டேபிள் க்ளாக்கும் அளிக்கப்படும்.



கர்வெக்ஸ் - சைஸ் 8½

| | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 594 | க்ரோம் ஸ்டீல்பேக் | 15 | 48 |
| 595 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 15 | 53 |
| 596 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 58 |
| 597 | க்ரோம் ஸ்டீல் பேக் | 17 | 58 |
| 598 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 17 | 63 |
| 599 | 20 மைக்ரோன் தங்கம் | 17 | 68 |
| 642 | ஆல் ப்ரூப் முழு ஸ்டீல் | 17 | 98 |



சென்டர் செகண்டு சைஸ் 8½

| | | | |
|---|---|---|---|
| 531 | க்ரோம் ஸ்டீல் பேக் | 5 | 30 |
| 532 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 5 | 33 |
| 533 | முழு ரோல்டு கோல்டு | 5 | 36 |
| 534 | க்ரோம் ஸ்டீல் பேக் | 7 | 34 |
| 535 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 7 | 37 |
| 536 | முழு ரோல்டு கோல்டு | 7 | 40 |
| 585 | க்ரோம் ஸ்டீல் பேக் | 15 | 59 |
| 586 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 15 | 64 |
| 587 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 74 |



லேடீஸ் - சைஸ் 5½

| | | | |
|---|---|---|---|
| 648 | க்ரோம் ஸ்டீல் பேக் | 5 | 39 |
| 649 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 5 | 42 |
| 650 | முழு ரோல்டு கோல்டு | 5 | 45 |
| 651 | க்ரோம் ஸ்டீல் பேக் | 7 | 42 |
| 652 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 7 | 45 |
| 653 | முழு ரோல்டு கோல்டு | 7 | 48 |
| 667 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 15 | 61 |
| 669 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 17 | 66 |
| 670 | 9 காரட் முழு தங்க கேஸ் | 15 | 98 |
| 671 | 18 காரட் முழு தங்க கேஸ் | 15 | 118 |



வாட்டர் ப்ரூப் ரேடியம் டயல்
சென்டர் செகண்ட் - சைஸ் 10½

| | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 629 | க்ரோம் ஸ்டீல் பேக் | 15 | 59 |
| 630 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 15 | 66 |
| 631 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 72 |
| 632 | ஆல் ப்ரூப் தட்டை வடிவம் க்ரோம் ஸ்டீல் பேக் | 17 | 79 |
| 633 | ஆல் ப்ரூப் தட்டை வடிவம் ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 17 | 85 |



டன்னோ - சைஸ் 6½

| | | | |
|---|---|---|---|
| 561 | க்ரோம் ஸ்டீல் பேக் | 5 | 35 |
| 562 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 5 | 38 |
| 563 | முழு ரோல்டு கோல்டு | 5 | 41 |
| 564 | க்ரோம் ஸ்டீல் பேக் | 7 | 41 |
| 565 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 7 | 44 |
| 566 | முழு ரோல்டு கோல்டு | 7 | 47 |
| 616 | க்ரோம் ஸ்டீல் பேக் | 15 | 52 |
| 617 | ரோல்டு கோல்டு ஸ்டீல் பேக் | 15 | 57 |
| 619 | 20 மைக்ரோன் தங்கம் | 15 | 67 |



மேடாரு அலாரம் டேபிள் கடிகாரம் (நெ. 684)

| | | |
|---|---|---|
| 681 | ஆபீஸ் டேபிள் க்ளாக், சதுர வடிவம் நவீன டயல் முழு க்ரோம் டயல் 3½'' | 20 |
| 682 | அலாரம் டேபிள் க்ளாக், டயல், சைஸ் 4'' | 19 |
| 683 | அலாரம் டேபிள் க்ளாக், முழு க்ரோம் கேஸ், ரேடியம் டயல், சைஸ் 4'' | 21 |
| 684 | மேடாரு அலாரம் டேபிள் க்ளாக் நவீன ரேடியம் டயல், சைஸ் 2½'' | 35 |

SWISS WATCH CO. 23 SADASHIV LANE, POST BOX NO. 3552, BOMBAY-4

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 10 இதழ் 2 | ஆகஸ்டு 13 | விக்ருதி ஆடி 29




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற  தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 10 கல்கி இதழ் 2

# என்ன சேதி ?

## பலித்த ஜோசியங்கள் !

மிக முக்கியமான சில சந்தர்ப்பங்களில் மற்றவர்கள் எதிர்பாராத விதத்தில் ராஜாஜி அவர்களின் ஜோசியங்கள் பலித்திருக்கின்றன. ஜெர்மனியும் ஜப்பானும் ஜயகோஷம் செய்துகொண்டிருந்த சமயத்தில் ராஜாஜி, "பிரிட்டிஷ் — அமெரிக்கர் தான் முடிவில் ஜயிப்பார்கள் !" என்றார். அம்மாதிரியே நடந்தது. "சென்னை நகரத்தைத் தாக்க ஜப்பானிய யுத்தக் கப்பல்கள் வருகின்றன; நகரைக் காலி செய்யுங்கள் !" என்று சென்னைக் கவர்னர் சொல்லி, சென்னை ஜனங்கள் அவசரமாக நகரைக் காலி செய்து கொண்டிருந்த காலத்தில், "ஜப்பான் இங்கே வராது. நான் சொல்லுகிறேன் ; நீங்கள் நகரை விட்டுப் போக வேண்டாம்" என்று ராஜாஜி கூறினார். சென்னைக்கு ஜப்பான்காரனால் ஆபத்து ஒன்றும் வரவில்லை. யுத்தம் முடிந்தபிறகு பிரிட்டனில் பொதுத் தேர்தல் நடந்தபோது, "யுத்தத்தில் ஜயித்த சர்ச்சில்தான் தேர்தலிலும் ஜயிப்பார் !" என்று அனைவரும் நம்பியிருந்தார்கள். ஆனால் தேர்தலுக்கு இரண்டு நாள் முன்பு கோகலே மண்டபத்தில், ராஜாஜி "தொழிற் கட்சியார்தான் ஜயிக்கப் போகிறார்கள் !" என்றார். அவர் சொன்னபடி அதுவும் நடந்து விட்டது.

## வாக்குப் பலிக்கட்டும் !

சென்ற வாரத்தில் இந்தியப் பார்லிமெண்டில் கொரியா யுத்தம் பற்றி ராஜாஜி பேசும்போது ஒரு விஷயம் சொல்லியிருக்கிறார். "கொரியா யுத்தம் உலக யுத்தமாக மாறப் போவதில்லை. ஆகையால் விலைவாசிகள் இறங்கப்போகின்றன ! சாமான்களைப் பதுக்கி வைக்கும் வியாபாரிகள் நஷ்டம் அடைவார்கள் !" என்று எச்சரிக்கை செய்திருக்கிறார். இந்த ஜோசியத்தில் முதற் பகுதியை எளிதில் நம்பி விடலாம். கொரியா யுத்தம் உலக யுத்தமாக மாறாது என்று ராஜாஜி சொல்வதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் விலைவாசிகள் இறங்கும் என்று சொல்லுவதை நம்புவது எளிதாக இல்லை. இந்தப் பொல்லாத விலைவாசிகளுக்கு ஏறத் தெரியுமே தவிர இறங்கவே தெரியாது என்று தோன்றுகிறது! சென்ற ஐந்தாறு வருஷத்து அனுபவங்கள் இப்படி நம்மை ராஜாஜியின் ஜோசியத்திலே கூட அவநம்பிக்கை கொள்ளச் செய்கின்றன. ஆயினும் ராஜாஜியின் வாக்கு இந்த விஷயத்தில் நடக்காத காரியத்தைக் கூட நடக்கும்படி செய்யுமாக ! விலைவாசிகள் விரைவில் இறங்கி மக்கள் நலமடைவார்களாக !

## பாரதியார் விழா

"கல்கி" நேயர்கள் தமிழ்நாட்டுக்கும் தமிழுக்கும் செய்திருக்கும் மகத்தான கைங்கரியம் இன்று பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் பாரதி ஞாபகார்த்த மண்டபமாக விளங்கி வருகிறது.

வழக்கம்போல் இந்த வருஷத்திலும் செப்டம்பர் 11௳ 12௳களில் எட்டயபுரம் பாரதி மண்டபத்தில் பாரதியார் விழா சிறப்பாக நடைபெறும். பாரதியாருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்றவர்களில் ஒருவரான தேசபக்தர் கனம் தி. சே. சௌ. ராஜன் விழாவுக்குத் தலைமை வகிப்பார். சபாநாயகர் கனம் சிவஷண்முகம் பிள்ளை விழாவைத் தொடங்கி வைப்பார். ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், மாஜி மேயர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு முதலிய தமிழறிஞர்கள் பாரதியாரைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள். கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களின் வில்லுப் பாட்டுக் காலட்சேபமும், ஸ்ரீமதி எம். எல். வசந்த குமாரியின் இசைக் கச்சேரியும் நடைபெறும். பாரதி விழாவுக்கு விஜயம் செய்யும் பாரதி சங்க அங்கத்தினர்கள் விழா நிர்வாகிகளின் விருந்தினராயிருப்பார்கள். இத்தகைய அரிய சந்தர்ப்பத்தைத் தமிழன்பர்கள் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

# மாயாவி நேரு!


"ஆசியாவின் தலைமைப் பதவியை அடைய நேரு சூழ்ச்சி செய்து விட்டார்."


"நேரு மேநாடுகளைக் கைவிட்டு விட்டார்."


"இல்லை, இல்லை! ஆசியாவில் மேநாடுகளுக்கு நேருவைத் தவிர உண்மையான நண்பர் யார் இருக்கிறார்?"


"நேருவை மேநாடுகள் நன்கு அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்..."


"...ஆனால் முதலில் அவர் மேநாடுகளை நன்கு அறிந்து கொள்ள முற்படுவாரா?"


"...இதெல்லாம் சரிப்பட்டு வராது. அவருக்கு மேநாடுகள் சரியான பாடம் கற்பிக்க வேண்டும்."
"எங்கள் விஷயத்தில் தலையிடு முன் காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்கப் பாருங்கள்."

















கொரியா யுத்த சம்பந்தமாக பண்டித ஜவாஹர்லால் நேருவின் பாரபட்சமற்ற கொள்கை அமெரிக்கப் பத்திரிகைகளைக் கிலி கொள்ளும்படி செய்திருக்கிறது. எனவே, அவை முன்னுக்குப்பின் முரணாக எழுதி வருகின்றன.

# சிவ பூஜையில் கரடி வந்தது!

திரை கடலைப்போல கம்பீரமாகக் காட்சி அளிக்கவேண்டிய மாபெரும் ஸ்தாபனம் குட்டையைப் போல் குழப்பப்பட்டு வருகிறது.

மேரு சிகரத்தைப் போல மகோன்னதமாக விளங்கவேண்டிய சபை சேற்றில் உழன்று சீர்குலைந்து வருகிறது.

அகில உலக மகா சபை என்று கூறப்படும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தைத்தான் குறிப்பிடுகிறோம்.

அந்தச் சபையைச் சென்ற ஏழு மாதங்களாக ருஷ்யா பகிஷ்காரம் செய்து வந்தது. சீன கம்யூனிஸ்டு சர்க்காருக்கு மேற்படி சபையில் ஸ்தானம் கொடுக்கவில்லை என்பதுதான் பகிஷ்காரத்துக்குக் காரணம்.

அந்தச் சபையின் நடவடிக்கைகளில் மறுபடியும் கலந்து கொள்ளப் போவதாகத் திடீரென்று ருஷ்ய சர்க்கார் அறிவித்தனர்.

ருஷ்யப் பிரதிநிதி மீண்டும் அதில் கலந்து கொள்வதால் அச் சபையில் ஏற்பட்டுள்ள முட்டுக் கட்டை தீர்ந்து குழப்பம் ஓரளவு தெளியலாம் என்று நினைத்தவர்கள் இருக்கக் கூடும்.

ஆனால் ருஷ்யப் பிரதிநிதி மறுபடியும் ஐக்கிய நாடுகள் சபைக்கு வந்திருப்பது சிவபூஜையில் கரடி பிரவேசித்த கதையாக முடிந்திருக்கிறது.

இந்தத் தடவை ருஷ்யப் பிரதிநிதி ஸ்ரீ ஜேகப் மாலிக் ஐ. நா. பாதுகாப்புச் சபையின் தலைவராகவும் இருக்க நேர்ந்திருப்பதால், வல்லரசுகளுக்குள் இருந்து வரும் தகராறும் போட்டா போட்டியும் இரண்டு மடங்கு அதிகமாகி யிருக்கின்றன.

நியாயம் எந்தக் கட்சியில் இருப்பினும், ருஷ்யாவுக்கு விரோதமாக அமெரிக்காவும், அமெரிக்காவுக்கு விரோதமாக ருஷ்யாவும் நடந்து கொள்வது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது.

உலக நாடுகளிடையே ஏற்படும் அடிதடிகளையும் சண்டை சச்சரவுகளையும் தீர்த்து சர்வதேச சமாதானத்தை உருவாக்குவதற்காக, யுத்த அந்தகாரத்தை ஒழித்துச் சமாதான ஒளி நிலவும்படி செய்வதற்காக ஏற்பட்ட சபையிலேயே இன்று இருள் சூழ்ந்திருப்பதைக் காண்கிறோம்.

உலக ஜனங்களின் நல்ல விதியை நிர்ணயிக்கும் கைங்கர்யத்தில் ஈடுபட வேண்டிய மாபெரும் பிரதிநிதிகள், உழக்கில் கிழக்கு மேற்கு என்பதைப் போல உள்ளுக்குள்ளேயே சண்டை போட்டு வருகிறார்கள்.

சபையில் விவாதிக்க வேண்டிய விஷயங்களைப் பற்றிய அட்டவணையே இன்னும் நிர்ணயமானபாடில்லை!

அட்டவணையில் உள்ள எந்த விஷயத்தை முதலில் எடுத்துக் கொள்வது என்பது பற்றி நாள் கணக்கில் வல்லரசுப் பிரதிநிதிகளுக்குள்ளே வாய்ச் சண்டை நடந்து வருகிறது. அற்ப விஷயம் மலைபோல் வளர்ந்துவருகிறது.

எனவே, தங்களுடைய சொந்தச் சண்டையைத் தீர்த்துக் கொள்ள முடியாத இந்தப் பிரதிநிதிகள் தேசங்களிடையே ஏற்படும் போரை எவ்வாறு தீர்க்கப் போகிறார்களோ! உலக மகா யுத்தத்தை எப்படித் தவிர்க்கப் போகிறார்களோ! உலக சமாதானத்தை எவ்விதம் நிலைநிறுத்தப் போகிறார்களோ!

* * *

இப்போது ஐ. நா. சபையிலே விசித்திரமான ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதாவது சீனாவின் உண்மையான பிரதிநிதி யார் என்பதே தகராறுக்கு முக்கிய காரணமாக இருந்து வருகிறது.

கம்யூனிஸ்டு சீன சர்க்காரின் கொள்கை எதுவாயினும், அந்த நாட்டிலுள்ள நாற்பத்தைந்து அல்லது ஐம்பது கோடி ஜனங்கள் அந்த ஒரே சர்க்காரின் கீழ் இருந்து வருகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஓர் அரசாங்கத்துக்கு இன்றியமையாத எல்லா அம்சங்களுடனும் அந்தச் சர்க்கார் இருந்து வருகிறார்கள் என்பதையும் மறுப்பதற்கில்லை.

மேற்படி கம்யூனிஸ்டு சர்க்காரை இந்தியா அங்கீகரித்திருக்கிறது. பிரிட்டன் முதலிய நாடுகளும் ஒத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் அமெரிக்கா அங்கீகரிக்க மறுக்கிறது.

சீன சர்க்காரை பிரிட்டன் அங்கீகரித்திருப்பினும், மேற்படி சர்க்காரின் பிரதிநிதிக்கு ஐ. நா. சபையில் ஸ்தானம் அளிக்க பிரிட்டன் மறுப்பதுதான் வேடிக்கையாக இருக்கிறது.

அதாவது அமெரிக்காவின் கட்சியின் உள்ள பிரிட்டன் அமெரிக்காவுக்கு விரோதமாக சீன சர்க்கார் பிரதிநிதியை அங்கீகரிக்க விரும்பவில்லை.

அவ்வாறாக, அரசியல் நியதியையும் நேர்மையையும் காட்டிலும் கட்சிப் பிரதி கட்சி உணர்ச்சியும் பாரபட்சமுமே மேவி நிற்கின்றன.

உலக சமாதானமே தங்களுடைய லட்சியம் என்றும், அதற்காக எவ்வித முயற்சியும் செய்யத் தாங்கள் தயாராக இருப்பதாயும் கூறும் அமெரிக்காவும் பிரிட்டனும் உலக சமாதானத்துக்கு முதல் முட்டுக் கட்டையாக இருக்கும் சீனப் பிரச்னையைத் தீர்க்க ஏன் முன் வரக்கூடாது?

உலகத்திலேயே பெரிய தேசமான சீனாவின் சட்ட பூர்வமான சர்க்கார் பிரதிநிதிகளுக்கு இடம் கொடுக்காமல், சர்க்காரே இல்லாத ஒரு பிரதிநிதிக்கு அந்தச் சபையிலே இடம் கொடுத்திருப்பது எவ்வாறு நியாயம் ஆகும் என்று ருஷ்யப் பிரதிநிதி கேட்கும் கேள்விக்குச் சரியான பதில் அளிப்பது கஷ்டமான காரியம்தான்.

“குறிப்பிட்ட ஒரு சர்க்காரை அங்கீகரிப்பது அதன் கொள்கையை அங்கீகரிப்பதாகாது. கொள்கை வேற்றுமை காரணமாக ஒரு தேச சர்க்காரை விரோதியாகக் கருத முற்படும் பட்சத்தில் ஒவ்வொரு நாடும் பல நாடுகளைப் பகைத்துக் கொள்ள நேரும்” என்று பண்டித ஜவாஹர்லால் நேரு சென்ற வாரம் இந்தியா பார்லிமெண்டில் தெளிவாகக் கூறி யிருக்கிறார்.

கொரியா யுத்தம், சீனப் பிரச்னை இவை பற்றி ஜவாஹர்லால்ஜி அனுஷ்டித்துவரும் கொள்கையை ராஜாஜி முதல் அநேகமாக பார்லிமெண்டிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் ஆதரித்திருக்கிறார்கள். எனவே, அவ்விஷயமாக இந்தியாவின் நிலைமை எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றி நிர்ணயமாகி யிருக்கிறது.

இந்தியாவின் சமரச யோசனையை அமெரிக்காவும் பிரிட்டனும் அங்கீகரித்திருக்குமாயின், உலக சமாதானப் பாதையில் இதற்குள் பல படிகளைத் தாண்டி முன்னேறி யிருக்கலாம்.

* * *

போட்டா போட்டியிலும் கட்சி உணர்ச்சியிலும் இளைத்துத் தத்தளித்து வரும் நாடுகளுக்குப் பாரத நாட்டின் சிறந்த உதாரணம் கலங்கரை விளக்காக அமைந்திருக்கிறது என்று கூறுவது மிகையாகாது.

ஒவ்வொரு கட்சியிலும் உள்ள நியாயத்தை ஆதரிக்கவும் அநீதியைக் கண்டிக்கவும் இந்தியா தயங்கவில்லை. வல்லரசுகளின் முகம் கோணி விடுமோ என்று இந்தியத் தலைவர்கள் சிறிதும் கவலைப்படவில்லை.

உதாரணமாக, வடக்கு கொரியாவின் ஆக்கிரமிப்பைக் கண்டித்த இந்தியா, சீனாவில் ஏற்பட்டுள்ள கம்யூனிஸ்டு சர்க்காரின் பிரதிநிதிக்கு ஐ. நா. பாதுகாப்புச் சபையில் ஸ்தானம் அளிக்க வேண்டியது அவசியம் என்றும் வற்புறுத்தி யிருக்கிறது.

வீண் கௌரவத்தைப் பாராட்டாமல் இந்தியாவின் யோசனைக்கு வல்லரசுகள் செவி சாய்த்தாலன்றி தற்போது ஏற்பட்டுள்ள சர்வதேசச் சிக்கல்கள் தீரும் என்று தோன்றவில்லை.

அதற்கு மாறாக மேற்படி சிக்கல்கள் முற்றி மகா கோர யுத்தத்தில் வந்து முடிந்தாலும் முடியலாம்.

பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகள் இப்போது முதற்கொண்டே யுத்த தளவாடங்களைப் பெருக்க ஆரம்பித்து விட்டன. மேற்கத்தி நாடுகள் ஐக்கியம் என்றும் அட்லாண்டிக் நாடுகள் ஐக்கியம் என்றும் கட்சிகள் உருவாகி வருகின்றன.

உலகத்திலுள்ள ஏழை நாடுகளின் பொருளாதார உத்தாரணத்துக்காக உதவி புரியும் விஷயத்தில் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் தாமதித்து வரும் அமெரிக்கா இராணுவச் செலவை நினைத்த மாத்திரத்தில் கோடி கோடியாக அதிகப்படுத்திக் கொண்டிருக்கிறது; பிரிட்டன், பிரான்ஸ் உள்படத் தன் கட்சியில் இருக்கும் சகல நாடுகளுக்கும் யுத்த தளவாடங்களைப் பெருக்குவதற்காகச் சிறிதும் தாமதமின்றிக் கோடிக் கணக்கில் உதவி புரியவும் சித்தமாக இருக்கிறது.

இவ்வாறாக விபரீதச் சக்கரம் வேகமாகச் சுழன்று வருகிறது.

முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் வல்லரசுகள் யுத்த தளவாடங்களைப் பெருக்க முற்பட்டது இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பூர்வாங்கமாக அமைந்தது. அதுபோல இப்போது மறுபடியும் வல்லரசுகள் ஆயுதப் பெருக்கத்தில் ஈடுபட்டிருப்பது மூன்றாவது மகா யுத்தத்துக்குப் பூர்வாங்கமாக அமையாமல் இருக்குமா?

மகா யுத்தத்தைச் சிருஷ்டிப்பதோ அல்லது தவிர்ப்பதோ வல்லரசுகளின் கையில்தான் இருக்கிறது. ஆனால், மகா யுத்தம் மூண்டு விட்டால் அதனால் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்களையும் இன்னல்களையும் தவிர்க்கக்கூடிய சக்தி யாருக்குமே இல்லை என்பது உலக நாடுகளின் இன்றைய நிதர்சனமான அனுபவம் அல்லவா?

# அக்கப்போர்

''உலகத்தில் இப்போது இரண்டு போர்கள் நடந்து வருகின்றன. ஒன்று கொரியாப் போர்; இன்னொன்று அக்கப்போர். இந்த இரண்டு போர்களிலும் அக்கப்போர்தான் எனக்குச் சுவாரஸ்யமாயிருக்கிறது'' என்று ஒரு நேயர் எழுதியிருக்கிறார். அவர் வாழ்க! அக்கப்போர் வாழ்க!!

★

சென்ற இரண்டு உலக மகா யுத்தங்களிலும் ஆரம்ப காலத்தில் ஜெர்மானியர் விரைவாக முன்னேறி வந்தார்கள். அப்போதெல்லாம் பத்திரிகைகளில் பிரசுரமாகும் யுத்தச் செய்திகளில் ஒரு பல்லவி அடிக்கடி வரும்.

''நேசக் கட்சிப் படைகள் ஜெர்மன் படைகளைச் செம்மையாக வெளுத்து வாங்கி முறியடித்த பின்னர் பத்து மைல் வெற்றிகரமாகப் பின்வாங்கின!''

இத்தகைய செய்திகள் அடிக்கடி வந்தது காரணமாக, ''வெற்றிகரமாகப் பின்வாங்கினார்கள்'' என்ற சொற்றொடர் பிரபலமாயிற்று.

இப்போது நடக்கும் கொரியா யுத்தத்தில் வேறொரு சொற்றொடர் பிரபலமாகி வருகிறது.

''தென் கொரியாவில் அமெரிக்கப் படைகள் **போதுமான அளவு பின்வாங்கி விட்டதாகக்** கருதப்படுகிறது!''

இம்மாதிரி ரேடியோவில் பல தடவை சொல்லி விட்டார்கள்; பத்திரிகைகளிலும் பல தடவை அச்சிட்டு விட்டார்கள். ஆயினும் இன்று (ஆகஸ்டு 8உ) வரையில் அமெரிக்கப் படைகள் **போதுமான அளவு பின்வாங்கி விட்டதாகத்** தோன்றவில்லை. **பின்வாங்குதல் உண்மையில்** எந்த இடத்தில் போதுமான அளவு ஆகும் என்றும் தெரியவில்லை. ஒருவேளை பூஸான் துறைமுகத்தில் கப்பல் ஏறிய பிறகுதான் போதுமான அளவு பின்வாங்கியதாகுமோ, என்னமோ!

★

கொரியா யுத்தம் சம்பந்தமாக வரும் செய்திகளில் வழக்கம்போல் அந்த நாட்டு ஊர்களின் பெயர்கள் அதிகமாக வருகின்றன. தமிழ் எழுத்துக்களில் 'ங்' எழுத்துக்கு மட்டும் இப்போது பிரமாத கிராக்கி. யாங்டாங், கேசாங், பியோங்யாங், போஹாங், யாங்டோக், ஓயோங்ஜு, ஹாம்சாங், சாங்க, ஹாம்சாங்—என்னும் ஊர்களில் குண்டுகள் விழுந்து, நாசமாக்கிக் கொண்டிருந்தபோதிலும் அந்த ஊர்களின் பெயர்களை எழுதுவதற்கும் படிப்பதற்கும் கஷ்டமாயில்லை; கேட்பதற்கு இனிமையாகக்கூட இருக்கிறது.

சென்ற மகா யுத்தத்தின்போது வந்த செய்திகளைப் படித்தவர்களுக்கு ருஷியா தேசத்து ஊர்ப் பெயர்கள் நம்மை எவ்வளவு தொந்தரவு படுத்தின என்பது ஞாபகம் இருக்கலாம். அந்த நாட்டு ஊர்ப் பெயர்களை உச்சரிப்பது பிராண சங்கடமாயிருந்தது.

''தென்மேற்கு ருஷியப் பகுதியில் **விளாட்ஸ்லியோவ்ஸ்கிபோக்ஸ்லியாஸ்கிராட்** என்னும் பட்டணத்தின்மீது ஜெர்மன் விமானங்கள் குண்டு மழை பொழிந்ததில் அந்தப் பட்டணம் மிகவும் சேதமாயிற்று'' என்பதாக ஒருநாள் ஒரு செய்தி பத்திரிகைகளில் வெளியாயிற்று.

இதைப் படித்த வாசகர் ஒருவர் ''**குண்டு மழை பொழிந்து சேதமடைந்த பிறகுதானே அதன்பெயர் இப்படி மாறியிருக்கவேண்டும்?**'' என்று கேட்டாராம்.

கொரியாவின் பெயர்கள் நம்மை அப்படியெல்லாம் தொந்தரவு படுத்தவில்லையல்லவா!

★

இந்த விசித்திரத்தைக் கேளுங்கள். தென் கொரியாவுக்கு உதவி செய்வதற்காக அமெரிக்கர்கள் போர் நடத்துகிறார்கள். ஆனால் தென் கொரியாவின் பட்டணங்கள், பாலங்கள், ஆலைகள், துறைமுகங்கள்,—ஆகியவற்றின்மீது தான் அமெரிக்கர்கள் டன் கணக்கில் குண்டுகளைப் போடவேண்டியிருக்கிறது. தென் கொரியா விடுதலை யடைவதற்கு முன்னால் அந்த நாட்டில் ஒரு குட்டிச்சுவர்கூடப் பாக்கியில்லாமல் தரை மட்டமாகி விடலாம்.

ஆனால் இதற்காகத் தென் கொரியர்கள் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. கடைசியாக, அமெரிக்கப் படைகள் தென் கொரியாவின் சுதந்திரத்தை நிலைநாட்டி விட்டு வெளியேறும்போது ஏராளமான யுத்த தளவாடங்களை விட்டுவிட்டுப் போவார்கள். அந்தத் தளவாடங்களைக் கொண்டே நாட்டைப் புனர்நிர்மாணம் செய்துவிடலாம். ஆனால் அச்சாமான்கள் வந்திருக்கும் பெட்டிகளை மட்டும் தக்க சமயத்தில் திறந்து பார்க்க வேண்டும்.

★

இதைக் கேட்டீர்களா! சென்னைக் கடற்கரையில் பிரம்மாண்டமான பெட்டிகள் சில வருஷக் கணக்காக மழையில் நனைந்து கொண்டும் வெயிலில் காய்ந்து கொண்டும் கிடந்தன. அந்தப் பெட்டிகளுக்குள் என்ன இருக்கின்றன, அவை யாரைச் சேர்ந்தவை என்று தெரியவில்லை. கடைசியாக, வருணனும் சூரியனும் சேர்ந்து ஒரு பெட்டியைத் திறந்து காட்டினார்கள். உள்ளே பிரம்மாண்டமான இராணுவ லாரி ஒன்று இருந்தது. இம்மாதிரி 300 பெட்டிகளில் 300 ராணுவ லாரிகள் வருஷக் கணக்காகக் கிடந்து அழிந்தன. இவற்றின் பெறுமானம் ஒரு கோடி இருபது லட்சம் ரூபாயாம்!

இப்படிப்பட்ட அசிரத்தைக்கும் பொருள் நஷ்டத்துக்கும் யார் காரணம் என்று தெரியவில்லை; தெரிய வேண்டியதுமில்லை. இதைப் பற்றி இந்திய பார்லிமெண்டில் கேள்வி கேட்காமலிருந்தால் நல்லது. ஏனெனில், கேள்வி கேட்டால் உடனே ஒரு விசாரணைக் கமிஷன் நியமிப்பார்கள். அந்த விசாரணைக் கமிஷன் ஒரு கோடி இருபது லட்சம் ரூபாய் செலவு செய்த பிறகு, ''நஷ்டத்துக்குப் பொறுப்பானவர்கள் வேலையை விட்டு முன்னமே ரிடயர் ஆகிவிட்டார்கள்!'' என்று கண்டு பிடித்துச் சொல்வார்கள். ஆகையால் நஷ்டத்தைப்பற்றி விசாரணை நடத்தாமலிருப்பதே நலம்.

## இருவருக்கும் ஏற்றது....

சுகமான நீடித்த நறுமணம்
அழகிய மிருதுவான சருமம்
ஆகிய இரண்டும் அளிப்பது.

பாஸ்பா-ஜாஸ்மின் ஸ்நான சோப்.




# JASMINE
### TOILET SOAP



வெகு குஷியான ஸ்நானத்திற்கு அல்லது முகம் கைகளை சுத்தம் செய்வதற்கேற்ற சிறந்த பரிமள சோப்பு—சிக்கனமானது. மிகவும் சௌகரியமானது

**பம்பாய் சோப் பாக்டரி, பம்பாய்**
(ஸ்தாபிதம்: 1904)

ஏஜண்டுகள்: ஜெய் ஹிந்த் ஏஜன்ஸீஸ்
2/9, பந்தர் தெரு. ஜி.டி., மதராஸ்

NAS. 447

---

உலகப் பிரசித்தி பெற்ற ஜாம்பக் உபயோகிப்பதனால்

## தசை வலியும், நோவும்
### மாயமாய் மறைகின்றன



இலேசாக ஜாம்பக் தேய்த்தவுடனேயே ஆஸ்வாசம் ஏற்படுகிறது. அதி ஆச்சரியகரமான. இந்த மூலிகைக் களிம்பிலுள்ள உயர்ந்த மருந்துத் தைலங்கள் சருமத்தின் ஊடே சென்று வாடி வதங்கி வலியுறும் தசைகளுக்கு குணமாகும்படி ஹிதமளிக்கிறது. எத்தகைய தசைப் பிடிப்பு. தசை வலி, மூட்டுப் பிடிப்பு, பாதங்களில் வெக்காடு, வலி ஆகிய உபாதைகளுக்கும் ஜாம்பக் ஒரு சிறந்த ஔஷதம். மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பதற்கு உத்தரவாதம்.




எப்பொழுதும் உபயோகியுங்கள்

# Zam-Buk

ஆறுதலளித்துக் குணமாக்கும் கிருமிநாசனக் களிம்பு

No. 2




“கோப்பனம்பட்டி கொலைக் கேஸ்” என்று சேலம் ஜில்லாவில் சில காலம் பிரசித்தமாகப் பேசப்பட்டு வந்தது. பொய்மான் கரடுக்குச் சமீபத்தில் வசித்த செங்கோடன் என்னும் துடியான வாலிபன் “நான் தான் கொன்றேன்” என்று ஒப்புக் கொண்டான். ஆனால் அவனுடைய பேச்சில் அதிகாரிகள் நம்பிக்கை கொள்ளவில்லை. அவன் யாரோ ஒரு பெண்பிள்ளையின் பேரில் மோகங்கொண்டு அவளைத் தப்புவிப்பதற்காக அவ்விதம் தான் செய்ததாய் ஒப்புக் கொள்ளுவதாகச் சந்தேகப்பட்டார்கள். இந்த வழக்கின் மர்மத்தைக் கண்டுபிடிப்பதில் 374-ம் நம்பர் கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டர் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அவர் என்ன கண்டுபிடித்தார் என்பதைக் கீழே படியுங்கள்:—

## 16

மறுநாள் சேலத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் பிரகாசராவ் நாயுடு 374-ம் நம்பர் கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டரைக் கூப்பிட்டு, “அப்பா, 374! உன்னை என்னமோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நீ சுத்த உபயோகமற்றவன்!” என்றார்.

“வந்தனம், ஸார்! நான் உபயோகமற்றவனாயிருந்தாலும் சுத்த உபயோகமற்றவன் என்றாவது சொன்னீர்களே! இந்தப் போலீஸ் இலாகாவில் சுத்தமாயிருக்கிறதே பெரிய காரியந்தானே?” என்றார் நம்பர் 374.

“உனக்கு இப்போது வாய் அதிகமாகிப் போய்விட்டது. காரியத்தில் ஒன்றும் பிரயோஜனம் இல்லை!”

“இப்படிச் சொல்லி விட்டீங்களே, ஸார்! உங்களிடம் நான் ஒப்புக் கொண்ட காரியத்தைச் செய்து முடித்தேனா, இல்லையா?”

“அப்படி என்ன பிரமாதமான காரியத்தைச் சாதித்து விட்டாய்?”

“பிரமாதமான காரியமோ, என்னமோ, எனக்குத் தெரியாது, ஸார். இந்த ஜில்லாவில் கள்ள நோட்டு நடமாடத் தொடங்கியிருப்பதாகத் தாங்கள் ஒரு நாள் சொல்லிக் கவலைப்பட்டீர்கள். நான் குற்றவாளிகளைக் கண்டு பிடித்துத் தருவதாக ஒப்புக் கொண்டேன். கண்டு பிடித்துக் கொடுத்தேனா, இல்லையா?”

“குற்றவாளிகளோடு, குற்றவாளியில்லாத ‘இடியட்’ ஒருவனையும் கண்டு பிடித்துக் கொடுத்திருக்கிறாய்! அவன் கேஸையே குட்டிச் சுவராக அடித்து விடுவான் போலிருக்கிறது.”

“செங்கோடக் கவுண்டனைத்தானே சொல்லுகிறீர்கள்?”

“அவனையேதான்! அவனை உன்னை பேசச் செய்தால் ஒழிய இந்தக் கேஸில் வீண் குழப்பம் ஏற்படும்.”

"அவனையும் உடந்தைக் குற்றத்துக்காகப்பிடித்துத் இட்டினால்போகிறது!"

"அவனையும் சேர்த்தால் கேஸ் உருப்படாமல் போய்விடும். நம் தரப்பில் அவன் சாட்சி சொன்னால் கேஸை ருசுப்படுத்துவது சுலபம்."

"இதில் என்ன கஷ்டம்? 'உன்னை மன்னித்து விடுகிறோம்' என்று சொன்னால், நாம் சொல்லிக்கொடுக்கிறபடி சாட்சி சொல்லுகிறான்!"

"அது நடக்கிற காரியம் என்று தோன்றவில்லை. கிளிப் பிள்ளையைப் போல், 'நான்தான் கொன்றேன்; நான்தான் கொன்றேன்' என்று உளறிக்கொண்டிருக்கிறான். எதற்காக அப்படி உளறுகிறான் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். அதில் ஏதோ மர்மம் இருக்கிறது! நீ அவனுக்கு அந்தரங்கமானவனைப் போல் நடித்து உண்மையைஅறிய வேண்டும்."

"பிரயத்தனப்பட்டுப் பார்க்கிறேன், ஸார்! ஆனால் உங்களுக்கு ஏதாவது சந்தேகம் தோன்றியிருக்கிறதா? எதற்காக அவன் அப்படி உளறுகிறான் என்று!"

"ஒரு சந்தேகம் தோன்றுகிறது. இந்தப் பெண், அழகு சுந்தரி இருக்கிறாளே? ஸினிமா உலகத்தையே ஒரு கலக்குக் கலக்கப்போகிற வருங்கால பிரபல நட்சத்திரம்! அந்தக் குமாரி பங்கஜா கள்ள நோட்டுப் பங்காருசாமியைக் குத்திக் கொன்றுவிட்டதாகச் செங்கோடன் நினைத்துக் கொண்டிருக்கிறான்! அவள் பேரில் இந்தப் பைத்தியக்காரனுக்குமோகம்போலிருக்கிறது. அவளைக் காட்டிக் கொடாமல் காப்பாற்றுவதாக நினைத்துக்கொண்டு இவன் இப்படிப் பிதற்றுகிறான்...! இது என்னுடைய ஊகம். உனக்கு ஏதாவது ஊகம் தோன்றுகிறதா?"



"மன்னிக்கவேணும், ஸார்! எனக்கு ஒன்றும் தோன்றவில்லே."

"இதோ பார், சின்ன முத்து! நீ கூட எதையாவது மறைக்கப் பார்க்கிருயோ, தெரிந்ததை-யெல்லாம் சொல்லாம லிருக்கிருயோ என்று எனக்குச் சந்தேகம் ஏற்படுகிறது."

"இல்லவே இல்லே, ஸார்! நான் எதற்காக மறைக்க வேணும்? இந்தக் கேஸில் உண்மை வெளியாகிக் குற்ற வாளிகளுக்குத் தண்டனை கிடைத்தால், எனக்குப் பிரமோஷன் கிடைக்கும் என்று ஆசைப்பட்டுக் கொண் டிருக்கிறேன்! எஜமான் முன்னமே வாக்குக் கொடுத்திருக்கிறீங்களே?"

"அதை நான் மறந்துவிடவில்லே. இந்தக் கேஸ் மட்டும் சரியாக ருசு வாகிக் குற்றவாளிகளுக்குக் 'கன்விக் ஷன்' கிடைக்கட்டும்; உன்னே உடனே மேலே தூக்கிப் போடும்படி அவசியம் சிபார்சு செய்கிறேன்!"

"எஜமான்! அவசரத்தில், என்னேத் தூக்கிப் போடுவதற்குப் பதிலாகத் தூக்கிலே போடச் சிபார்சு செய்து விடாதீங்க!"

"சேச்சே! உன்னேத் தூக்கிலே போட்டால், அப்புறம் நம்ம டிபார்ட் மெண்டு என்ன ஆகிறது?"

கான்ஸ்டேபிள் சின்னமுத்துக் கவுண்டர் இன்ஸ்பெக்டர் அறையி லிருந்து வெளியில் சென்றபோது, "எல்லாம் இப்போது தேன் ஒழுகப் பேசுவீங்க! அப்புறம் 374-ம் நம் பரை அடியோடு மறந்துவிட்டு உங்கள் சுயகாரியத்தைப் பார்த்துக் கொள்ளுவீங்க!" என்று முணு முணுத்துக் கொண்டே போனர். ஆனலும் தம்முடைய கடமையைச் செய்வதில் அவர் பின்வாங்க வில்லே. போலீஸ் லாக்-அப்பில் இருந்த செங் கோடக் கவுண்டனிடம் சென்ருர்.

"தம்பி! இப்படியெல்லாம் அநாவ சியமாகப் பொய்யும் புளுகும் சொல்லி அகப்பட்டுக் கொண்டாயே? உன்னேப் பார்த்தால் எனக்குப் பரிதாபமா யிருக்கிறது!" என்ருர்.

செங்கோடக் கவுண்டன் மேலே உச்சி மேட்டைப் பார்த்துக்கொண்டு, "பொய்யும் புளுகும் சொல்லும் வழக் கம் எனக்குக் கிடையாது!" என்ருன்.

"உண்மைதான்; உனக்குப் பொய் சொல்லி வழக்கம் இல்லே. ஆகையினல் தான் மூன்ணுக்குப் பின் முரணுக உளறி அகப்பட்டுக் கொள்கிருய்! பொய் சொன்னலும் பொருந்தச் சொல்ல வேண்டு மல்லவா?"

செங்கோடன் போலீஸ்காரரின் முகத்தைக் கவலையுடன் பார்த்து, "அடியிலிருந்து ஒரே மாதிரிதானே சொல்லி வருகிறேன்?" என்ருன்.

"என்னத்தைச் சொல்லி வருகிருய்? 'பங்காருசாமியை நான்தான் கொன் றேன்' என்று உளறிக்கொண்டு வரு கிருய்! இல்லேயா?"

"ஆமாம்; அது நிஜந்தான்!"

"பொறு! 'கத்தியினல் குத்திக் கொன்றேன்' என்றும் பிடிவாதமாய்ச் சொல்லி வருகிருய். இல்லேயா?"

"ஆமாம்; என் கையில் இருந்த கத்தியைக்கூடப் பார்த்தீங்களே?"

"உன் கையில் இருந்த கத்தியை என்னிடம் காட்டினய். அதில் இரத்தம் தோய்ந்திருந்தது. உன் கையிலும் இரத்தக் கறை இருந்தது. இதெல் லாம் சரிதான். அந்தக் கத்தியினல் நீ பங்காருசாமியைக் குத்திக் கொன்ற தாக என்னிடம் சொன்னதையே இன்ஸ்பெக்டரிடமும் சொன்னயா?"

"ஆமாம்; அப்படித்தான் சொன் னேன். ஒரு எழுத்துக்கூட மாற்றிச் சொல்லவில்லே."

"இனிமேலும் அப்படியே சொல்லப் போகிருயா?"

"ஆமாம்; மாற்றிச் சொல்லுகிற வழக்கம் என்னிடம் இல்லே. அந்தக் குலத்தில் நான் பிறக்கவில்லே..."

"குலம் கிடக்கட்டும், தம்பி, குலம்! குலத்தினல் வரும் கேட்டை எவ் வன்வோ நான் பார்த்தாகி விட்டது. இதைக் கேள்! பங்காருசாமியை நீ கத்தியால் குத்திக் கொன்றதாகச் சொன்னய் அல்லவா? இந்த ஊர்ப் பெரிய டாக்டர் வந்து இன்றைக்கு அவனேச் சோதனை செய்து பார்த்தார். பங்காருசாமியின் உடம்பில் கத்திக் குத்துக் காயமே இல்லே என்று சொல்லி விட்டார்!"

செங்கோடக் கவுண்டன் திருதிரு வென்று விழித்தான்.

"அது எப்படி? கத்தியில் இரத்தம் இருந்ததே?" என்றான்.

"தம்பி! கத்தியில் இருந்த இரத்தம் நாயின் இரத்தம்!" என்றார் போலீஸ்காரர்.

செங்கோடன் மறுபடியும் உச்சி மேட்டைப் பார்க்கத் தொடங்கினான்.

"பங்காருசாமியின் பின் தலையிலே தான் காயம் இருந்தது. அது கத்திக் காயம் இல்லை; கடப்பாறையினால் அடிபட்ட காயம்...!"

"ஓகோ! மறந்து போய் விட்டேன். நல்ல வேளை, ஞாபகப்படுத்தினீங்க! கடப்பாறையினால்தான் அவன் தலையில் அடித்தேன். இப்போதுதான் நினைவு வருகிறது. கத்தியால் குத்தவில்லை. போலீஸ் ஐயா! கொஞ்சம் நான் இப்போது சொல்லுகிறதை எழுதிக் கொள்ளுங்கள்......"

"தம்பி! இப்படி யெல்லாம் முன்னுக்குப் பின் விரோதமாக உளறினால் என்ன பிரயோஜனம்? யாரும் நம்ப மாட்டார்கள். இன்ஸ்பெக்டர் சவுக்கு எடுத்துக் கொண்டு வந்து உன்னைச் செம்மையாய்த் தீட்டி விடுவார்! முதுகுத் தோலை உரித்து விடுவார். விரல் நகங்களில் ஊசியை ஏற்றுவார். என்னிடம் உண்மையைச் சொல்லி விடு. நான் உன்னைத் தப்புவிக்கிறேன்! பயப்படாதே......!"

"நான் மட்டும் தப்பி என்ன பிரயோஜனம்?" என்று செங்கோடன் கவலையுடன் கூறினான்.

"இன்னும் யார் தப்ப வேண்டும்?" என்றார் போலீஸ்காரர்.

செங்கோடன் தான் தவறாகப் பேசி விட்டதை உணர்ந்து வாயை இறுக மூடிக் கொண்டான்.

"நீயும் தப்ப வேண்டும்; செம்பவளவல்லியும் தப்ப வேண்டும். அவ்வளவு தானே?" என்றார் போலீஸ்காரர்.

செங்கோடன் மிகக் கோபமாக, "செம்பாவின் பெயரை இதில் இழுக்க வேண்டாம். இழுத்தால் உமக்கும் பங்காருசாமியின் கதிதான்! ஜாக்கிரதை!" என்றான்.

"அப்பனே! என்னிடம் ஏன் மறைக்கப் பார்க்கிறாய்? இணைற்று மேட்டிலிருந்து நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தேன். சகல விவரமும் எனக்குத் தெரியும். செம்பாவின் குற்றத்தை மறைப்பதற்காக நீ செய்த காரியங்கூடத் தெரியும்......"

"உன்னையும் அந்தக் கத்தியால் அங்கேயே கொல்லாமல் போனேனே?" என்றான் செங்கோடன்.

"போனது போய் விட்டது. இனி நடக்க வேண்டியதை யல்லவா பார்க்க வேண்டும்? நீயும் தப்பித்துச் செம்பாவும் தப்பிக்க வேண்டுமென்றால் நடந்ததை நடந்தபடி என்னிடம் சொல்லிவிடு!" என்றார் போலீஸ்காரர்.

இன்னும் கொஞ்சம் நயத்தையும் பயத்தையும் கையாண்ட பிறகு செங்கோடன் வேறு வழியில்லை யென்று தனக்குத் தெரிந்ததைச் சொன்னான். அவன் குடிசைக்குச் சற்று தூரத்தில் எஸ்ராஜுடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தபோது குடிசைக்குள்ளிருந்து "ஐயோ! செத்தேன்!" என்ற குரல் கேட்டதல்லவா? உடனே அவன் சண்டையை நிறுத்திவிட்டுக் குடிசையை நோக்கி ஓடினான். கேணிக்கு அருகில் எதிரே ஓடி வந்த பங்கஜா அவன்பேரில் முட்டிக் கொண்டபடியால் சிறிது தாமதித்தான். அதே சமயத்தில் ஒரு நிழல் உருவம் குடிசையிலிருந்து வெளிப்பட்டதை அவன் கவனிக்க நேர்ந்தது. அது ஒரு பெண்ணின் உருவம் என்பதைக் கண்டு கொண்டான். அந்தப் பெண் உருவம் கையில் ஒரு பாத்திரத்தைத் தூக்கிச் சென்றது.

ஏற்கெனவே, செங்கோடன் மனதில் செம்பா அங்கு வந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியிருந்தது. இப்போது அது உறுதியாயிற்று. செம்பா தப்பிச் செல்வதற்கு அவகாசம் கொடுப்பதற்கென்றே சிறிது நேரம் பங்கஜாவுடனும் எஸ்ராஜுடனும் பேச்சுக் கொடுத்துக் கொண்டு நின்றான். பிறகு குடிசையை அணுகினான். அப்போதும் ஓர் உருவம் ஒரு கணம் தோன்றி மறைந்தது. இதனால் குழம்பிய மனதுடன் குடிசை வாசலுக்குச் சென்று விளக்கை ஏற்றினான். குடிசையின் வாசற்படியில் இரத்தக் கறைக்குப் பக்கத்தில் ஒரு சிவப்பான பொருள் கிடந்தது. அது செம்பா அணிந்திருந்த வளையல் என்பதைக்

கண்டுகொண்டான். அதை அவசரமாக எடுத்து மடியில் வைத்துக் கொண்டான். இப்போது அவனுடைய மனதில் நிச்சயம் ஏற்பட்டு விட்டது. செம்பாதான் உள்ளேயிருந்த ஆசாமியைக் குத்திக் கொன்றவள். தான் புதைத்து வைத்த பணம் பறிபோகாமலிருப்பதற்காகவே இந்தக் கொலையை அவள் செய்து விட்டாள்! அவள் கையில் எடுத்துப் போவது அடுப்பின் அடியில் தான் புதைத்து வைத்திருந்த செப்புக்குடந்தான். தனக்காக இப்படிப்பட்ட காரியம் செய்த பெண்ணைக் காட்டிக் கொடாமல் எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று உறுதி கொண்டான். குடிசைக்கு உள்ளே போய்ப் பார்த்ததும் பங்காருசாமி கீழே கிடந்தது தெரிந்தது. அந்தப் பாவி இன்னும் செத்தபாடில்லை. தன்னைக் கொன்றவன் ஒரு பெண் என்பதாக முணுமுணுத்துக் கொண் டிருந்தான். ஆகவே செம்பாவின் வளையல் அவளைக் கொலைக்கேஸில் மாட்டிவிடக் கூடிய தடையமாகலாம். இன்னும் ஏதாவது அப்படிப்பட்ட தடையம் கீழே கிடக்கிறதா என்று சுற்று முற்றும் பார்த்தான். பங்காருவின் பக்கத்தில் கிடந்த இரத்தம் தோய்ந்த கத்தியை எடுத்துக் கொண்டான். தரையில் சிதறிக் கிடந்த பண நோட்டுகள் அவனுடைய மனதைக் குழப்பின. அதைப்பற்றி யெல்லாம் தெரிந்து கொள்வதற்கு முன்னால், முதலில் தன் மடியிலிருந்த செம்பாவின் வளையலைக் கிணற்றுக்குள் போட வேண்டும் என்று தோன்றியது. உடனே வெளியே ஓடிவந்தான். எஸ்ராஜையும் பங்கஜாவையும் பயமுறுத்திக் குடிசைக்கு வெளியிலேயே நிறுத்தி வைத்து விட்டுக் கேணிக் கரைக்கு ஓடிவந்து வளையலைக் கேணியில் போட்டான். இரத்தம் தோய்ந்த கத்தியையும் கிணற்றில் போட்டு விடவேண்டும் என்பது அவன் எண்ணம். அதற்குள்ளே போலீஸ்காரர் தோன்றி விட்டார். செம்பவளவல்லியைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆர்வத்தினால் "நான்தான் கொன்றேன்!" என்று போலீஸ்காரரிடம் அவன் அலறினான். பிறகு போலீஸ் ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டரிடமும் அதே மாதிரி வாக்கு மூலம் கொடுத்தான்.

"ஐயா! போலீஸ்காரரே! உள்ளது உள்ளபடி எல்லாவற்றையும் சொல்லி விட்டேன். நீங்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவீர்களா?" என்று கேட்டான் செங்கோடன்.

"நான் என்ன வாக்குக் கொடுத்தேன்?" என்றார் போலீஸ்காரர்.

"அதற்குள் மறந்து விட்டீங்களா? உண்மையைச் சொன்னால் என்னையும் செம்பாவையும் தப்பித்து விடுவதாகச் சொன்னீங்களே! என்னைத் தூக்கிலே போட்டால் கூடப் பரவாயில்லை. செம்பாவை மட்டும் காப்பாற்றி விடுங்கள்!" என்றான்.

"ஏதோ என்னால் ஆன மட்டும் பார்க்கிறேன். ஆனால் நீயும் நான் சொல்லிக் கொடுக்கிறபடி இன்ஸ்பெக்டரிடம் சொல்லவேண்டும். அப்போதுதான் செம்பாவைக் காப்பாற்ற முடியும்."

"என்ன சொல்ல வேண்டும்?"

"அவரிடம் செம்பாவின் பேச்சையே எடுக்காதே! குமாரி பங்கஜாவிடம் நீ மோகங் கொண்டிருந்ததாகவும், அவள் பேரில் சந்தேகம் ஏற்படாமலிருப்பதற்காக நீ குற்றத்தை ஒப்புக் கொண்டதாகவும் சொல். திடுதிப்பென்று உடனே அவ்விதம் சொல்லி விடாதே! இன்ஸ்பெக்டர் உன் கன்னத்தில் இரண்டு அறை கொடுத்துக் கேட்ட பிறகு சொல்!"

செங்கோடன் தன் கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டான். "இன்ஸ்பெக்டர் அடித்தால் ரொம்ப வலிக்குமா?" என்று கேட்டான்.

"அதிகமாக வலிக்காது. பேய் அறை கிறது போலிருக்கும்!"

செங்கோடன் இன்ஸ்பெக்டரிடம் அப்படிச் சொல்லவேண்டிய அவசியத்தைப்பற்றிப் போலீஸ்காரர் மேலும் வற்புறுத்திய பிறகு ஒருவாறு ஒப்புக் கொண்டான்.

"போலீஸ்கார ஐயா! இந்த விஷயம் செம்பாவின் காதில் விழுந்தால் என்ன செய்கிறது?" என்று கேட்டான்.

"எந்த விஷயம்?"

"நான் குமாரி பங்கஜாவைக் காதலித்தேன் என்று ஒப்புக் கொண்டது."

"அதைப் பற்றிச் சமாதானம் சொல்வதற்கு உனக்கு வேண்டிய சாவ

காசம் கிடைக்கும். கலியாணம் ஆன பிறகு ஆயுள் முழுதும் சமாதானம் சொல்லிக் கொண்டிருக்கலாம்.''

"அது போனால் போகட்டும். செம்பாவைப் பார்த்து எனக்காக ஒரு விஷயம் மட்டும் சொல்லி விடுங்கள். செப்புக்குடத்தில் இருந்த எட்டு நூறு ரூபாயையும் பத்திரமாய் வைத்திருக்கச் சொல்லுங்கள். என்னுடைய கேஸுக்காக ஒரு காலணா கூடச் செலவழிக்க வேண்டாம். நடக்கிறது நடக்கட்டும்.''

"நல்ல கருமி அப்பா, நீ!''

"செம்பாவின் தம்பிகள் சோளக் கொல்லையில் புகுந்து அழித்து விடப் போகிறார்கள். நன்றாய் முற்றுவதற்கு முன்னால் ஒரு சோளக் கொண்டை கூடப் பறிக்கக் கூடாது. அப்படி அந்த வாண்டுகள் இளஞ் சோளக் கொண்டையைப் பறித்ததாகத் தெரிந்தால் வந்து அவர்களுடைய மென்னியை முறித்துக் கொன்றுவிடுவேன் என்று சொல்லுங்கள்!''

"போதும்; நீ ஒரு கொலை செய்ததே போதும்! உன் பணத்துக்கும் ஆபத்து வராது; சோளக் கொல்லைக்கும் ஆபத்து வராது. கவலைப்படாதே!'' என்றார் போலீஸ்காரர்.

## 17

போலீஸ்காரர் சின்னமுத்துக் கவுண்டர் பிறகு அதே லாக்-அப்பில் இன்னொரு அறையில் இருந்த குமாரி பங்கஜாவைப் பார்க்கச் சென்றார். போலீஸ்காரரைப் பார்த்ததும் பங்கஜா கண்ணீர்விட்டுக் கதறி அழுது விட்டாள். "நீங்கள் சொன்னதைக் கேட்காதபடியால் இந்த கதிக்கு வந்தேன். அந்தப் பாதகர்கள் என்னை இப்படிப் படுகுழியில் தள்ளிவிட்டார்கள்! நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!'' என்றாள்.

"நடந்தது நடந்தபடி எல்லாவற்றையும் சொன்னால் உன்னைக் காப்பாற்றப் பார்க்கிறேன்! ஒரு விஷயத்தையும் என்னிடம் மறைக்கக் கூடாது!'' என்றார் போலீஸ்காரர்.

"இல்லை; மறைக்கவில்லை. உங்களிடம் சொல்லாமல் மறைத்து வைத்ததினால்தான் இப்படிப்பட்ட கதியை அடைந்தேனே! எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்!'' என்றாள் பங்கஜா. அவள் தட்டுத் தடுமாறி முன்னும் பின்னுமாய்ச் சொன்னதின் சாராம்சம் இதுதான்:

குமாரி பங்கஜாவும் அவள் குடும்பத்தினரும் மலாய் நாட்டிலிருந்து சொத்து சுதந்திரங்களைப் பறிகொடுத்துவிட்டு வந்தவர்கள். வரும் வழியில் தகப்பனாரையும் பறி கொடுத்தார்கள். போலீஸ்காரரிடம் ஆரம்பத்தில் அவள் நாலு அணா யாசகம் வாங்கியதற்குக் கூறிய காரணமும் உண்மையே யாகும். இதற்கிடையில், பங்காருசாமி என்பவனிடம் அவளுக்கு அறிமுகம் ஏற்பட்டது. போலீஸ்காரரிடம் கேட்டது போல் அவனிடமும் அரிசி வாங்க நாலு அணா கேட்டதிலிருந்து அந்த அறிமுகம் உண்டாகி வளர்ந்தது. பங்காருசாமி அடிக்கடி "உன்னைப் போன்ற அழகும், முகவெட்டும், படிப்பும், புத்திசாலித்தனமும் உள்ள பெண் எதற்காக இப்படிப் பிச்சை எடுக்கவேண்டும்? ஸினிமாவில் சேர்ந்தால் பிரபல நட்சத்திரமாகி லட்சக் கணக்காகப் பணம் சேர்க்கலாமே!'' என்று போதனை செய்து வந்தான். அதிலிருந்து ஸினிமாவில் நடிக்கும் சபலம் அவளுக்கு ஏற்பட்டது. பங்காருசாமி அடிக்கடி அவளைச் சந்தித்துத் தூபம் போட்டு ஆசையை வளர்த்து வந்தான். குமாரி பங்கஜா மலாய் நாட்டில் சுயேச்சையாக வளர்ந்தவள். வரும் வழியில் பல அநுபவங்களைப் பெற்றவள். ஆகையால் அவளுக்கு மற்றப் பெண்களைப் போல் அவ்வளவு நாணம், அச்சம், சங்கோசம் முதலியவை இருக்கவில்லை. பங்காருசாமி ஒரு சமயம் அவளை ஒரு ஸினிமா முதலாளியிடம் அழைத்துப் போனான். அதே சமயத்தில் இன்னொரு பிரபல ஸினிமா நடிகை வந்திருந்தாள். அந்த நடிகை சிரித்தால் அரைப் பைத்தியம் மாதிரி இருந்தது; அழுதால் முழுப் பைத்தியம் மாதிரி இருந்தது. அவளைப்போல் பங்கஜாவுக்குச் சிரிக்கவும் அழவும் தெரியவில்லை யென்று கருதியதால், ஸினிமாவில் சேர்த்துக்கொள்ள முடியாது என்று சொல்லி வருத்தத்துடன் திருப்பி அனுப்பி விட்டார்கள்.

இதனால் அவன் ஏமாற்றம் அடைந்திருந்த போதிலும் நிராசை அடையவில்லை. பங்காருசாமியும் தைரியப்படுத்தினான். தானே ஒரு படம் எடுக்கப் போவதாகவும் அதற்காகப் பணம் சேகரித்துக்கொண்டு வருவதாகவும் சொன்னான். படம் ஆரம்பிக்கும் வரையில் காலட்சேபத்துக்காக அவளிடம் பாக்கியிருந்த ஒரே ஒரு நகையான வைர அட்டிகையை விற்றுத் தருவதாகச் சொன்னான். பங்கஜா நம்பிக் கொடுத்தாள். பங்காருசாமியும் விற்றுக்கொண்டு வந்து பணத்தைக் கொடுத்தான். பங்கஜா அதைப் பத்திரமாய் வைத்திருந்தாள். அவசரச் செலவுக்காக ஐந்து ரூபாய் நோட்டு எடுத்துக்கொண்டு போய்க் கடையில் சாமான் வாங்கினாள். கடைக்காரன் அந்த நோட்டை வாங்கி மேலும் கீழும் திருப்பிப் பார்த்தான். "அம்மா! இது கள்ள நோட்டு! யாரோ உன்னை ஏமாற்றி விட்டிருக்கிறார்கள். முடியுமானால் அவனிடம் திருப்பிக் கொடுத்து வெள்ளி ரூபாயாக வாங்கு. இல்லாவிட்டால் நோட்டைக் கொளுத்தி விட்டுச் சும்மா இரு. போலீஸுக்குச் செய்தி தெரிந்தால் ஆபத்து வரும்!" என்று எச்சரிக்கை செய்து அனுப்பினான்.

பங்கஜா உடனே சொல்ல முடியாத கோபத்துடனும் தாபத்துடனும் வீடு திரும்பினாள். நோட்டுகளை அடுக்கி வைத்திருந்த பெட்டியை எடுத்துக்கொண்டு பங்காருசாமியைத் தேடிப் போனாள். வழியிலேதான் 374-ம் நம்பர் கான்ஸ்டேபிளைச் சந்தித்தாள். பார்த்துப் பேசாமல் போனால் சந்தேகம் ஏற்படும் என்று எண்ணி வழக்கம் போல் பணம் கேட்டான். பெட்டி திறந்து கொண்டதினால் போலீஸ்காரரின் சந்தேகத்துக்கு உள்ளானாள்.

**ப**ங்காருசாமியிடம் பங்கஜா கள்ள நோட்டுகளைத் திருப்பிக் கொடுத்துச் சண்டை பிடித்த போது, அவன் தானும் வேறொருவனிடம் ஏமாந்து போய்விட்டதாகக் கூறினான். அவனைக் கேட்டு வேறு நல்ல பணம் வாங்கித் தருவதாகக் கூறினான். அப்படிப் பங்காருவை ஏமாற்றியவனான எஸ் ராஜ் ஏற்கெனவே கோ-ஆபரேடிவ் சங்கப் பணத்தைக் கையாடினவன். இப்போது சின்னம நாயக்கன்பட்டி கூடார சினிமாவில் எப்படியோ மானேஜர் வேலை சம்பாதித்துக் கொண்டிருந்தான். அவனைத் தேடிக் கொண்டு பங்காரு போனான். பங்காரு தப்பி ஓடி மறைந்துவிடப் போகிறான் என்ற பயத்தினால் பங்கஜாவும் அவன் கூடப் போனாள். சின்னம நாயக்கன்பட்டி கிராமத்தில் யாருக்கும் தன் பேரில் சந்தேகம் ஏற்படாமலிருப்பதற்காகத் தான் பஞ்சாயத்து மானே



ஜர் என்றும் பங்கஜா தன் தங்கை என்றும் சொல்லிக் கொண்டான். எஸ்ராஜுவும் பங்காருவும் கள்ள நோட்டு அச்சிடுவதில் கூட்டாளிகள் என்று பங்கஜா அங்கே தெரிந்து கொண்டாள். எப்படியாவது தன்னுடைய பணத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டு அவர்களிடம் தப்பித்துக் கொண்டு சேலம் போகலாம் என்று எண்ணி யிருந்தாள்.

ஒரு நாள் அவர்கள் சினிமாக் கொட்டகையில் டிக்கட் விற்கும் இடத்தில் கள்ள நோட்டுகளில் சிலவற்றைச் செலாவணி செய்வதற்காக வைத்திருந்தார்கள். அந்த இடத்துக்குப் போலீஸ் காரர் வந்து எட்டி எட்டிப் பார்க்கவே இரு ஆசாமிகளுக்கும் சந்தேகம் உண்டாகிவிட்டது. உடனே பழைய பிலிம்கள் சிலவற்றைக் கள்ள நோட்டுகளுடன் சேர்த்து வைத்துக் கொளுத்தி விட்டார்கள். பிலிம்கள் சீக்கிரம் தீப் பற்றி எரியுமாதலால் அப்படிச் செய்தார்கள். அன்றைக்குத்தான் செங்கோடக் கவுண்டன் கூடார சினிமாவில் செய்த கலாட்டாவும் நடைபெற்றது. அந்தப் பட்டிக்காட்டுக் கவுண்டன் மூலமாகத் தங்கள் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று எஸ்ராஜுவும் பங்காருவும் உத்தேசித்தார்கள். போலீஸுக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டபடியால் கள்ள நோட்டு அச்சடித்த இயந்திரங்களையும் அச்சடித்த நோட்டுகளையும் அழித்துவிட எண்ணினார்கள். அதற்குச் செங்கோடனின் கேணியும் குடிசையும் தக்க இடம் என்று கண்டு பிடித்தார்கள். அத்துடன் செங்கோடக் கவுண்டன் புதைத்து வைத்திருந்த பணத்தையும் கபளீகரம் செய்ய யத்தனித்தார்கள். இதற்கு உதவி செய்யும்படிக் குமாரி பங்கஜாவைக் கேட்டுக் கொண்டார்கள். அவள் உதவி செய்து அந்தப் பட்டிக் காட்டானைத் தன் மோக வலையில் ஆழ்த்தி வைத்திருந்தால் காரியம் கை கூடிவிடும். அவளுக்குச் சேர வேண்டிய பணமும் கிடைத்து விடும். அதோடு எஸ்ராஜுக்குச் சென்னையில் சில ஸினிமா முதலாளிகளைத் தெரியும் என்றும், அவர்களிடம் பங்கஜாவை அழைத்துப் போய்ச் சிபார்சு செய்வதாகவும் வாக்களித்தார்கள். அவர்களுடைய துர்ப்போதனைக்குப் பங்கஜாவும் சம்மதித்தாள். அவர்கள் சொற்படியே போலீஸ்காரரிடம் செங்கோடனுக்குக் கடிதம் கொடுத்தனுப்பினாள். பங்கஜா — செங்கோடன் சந்திப்பில் என்ன நடக்கிறதென்று தெரிந்து கொள்ளப் போலீஸ்காரரும் அங்கு இருப்பார் என்றும், அச்சமயம் செங்கோடன் குடிசையில் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்றும் நம்பி யிருந்தார்கள். ஆனால் அவர்கள் எதிர்பார்த்த



தற்கு மாருகச் சில காரியங்கள் நடந்து விட்டன. செங்கோடன் பொய்மான் கரடு உச்சியில் நின்றபோது தன் குடிசையில் வெளிச்சம் தெரிந்ததைப் பார்த்து விட்டான். பார்த்து, குமாரி பங்கஜா தடுத்தும் கேளாமல் ஓடத் தொடங்கினன்.

"அதற்குப் பிறகு நடந்ததெல்லாம் உங்களுக்குத் தெரியுமே? கான்ஸ்டேபிள் ஸார்! எப்படியாவது என்னை இந்தத் தடவை காப்பாற்றிவிடுங்கள்! இனிமேல் இப்படிப்பட்ட போக்கிரிகளின் அருகிலும் போவதில்லை. பிச்சை யெடுத்தாவது பிழைத்துக் கொள்கிறேன்!" என்று சொல்லி விட்டுக் குமாரி பங்கஜா மறுபடியும் விம்மி விம்மி அழுதாள்.

அவள் அழுகையை நிறுத்தும்படி செய்வதற்குப் போலீஸ்காரர் மிகவும் பிரயாசைப்பட வேண்டியிருந்தது.

## 18

மேற்படி கள்ள நோட்டு வழக்கு விஷயமாக இன்னும் இரண்டொரு துப்புகள் துலங்கவேண்டியது பாக்கியிருந்தது. அதற்காகப் போலீஸ்காரர் கொப்பனும் பட்டிக்குப் போனர். சிவராமலிங்கக் கவுண்டரிடம் அவருடைய மகன் எப்பேர்ப்பட்ட இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறன் என்பதைத் தெரிவித்தார். எப்படியாவது செம்பாவின் பெயர் இந்த வழக்கில் அடிபடாமல் காப்பாற்ற வேண்டுமென்று கவுண்டர் ரொம்பவும் கேட்டுக் கொண்டார்.

செம்பவளவல்லி திக்பிரமை பிடித்தவள் போல் இருந்தாள். அவளுடைய மனதில் கேணியும், கேணிக்கரைக் குடிசையும், சோளத் தட்டைக் குவியலும், இரத்தம் தோய்ந்த கத்தியும், சாகும் நாயின் ஓலமும், குழி தோண்டும் மனிதர்களும், பயங்கர ஆயுதம் ஏந்திய போலீஸ்காரரும், சிதறிக் கிடந்த நோட்டுகளும், கையில் விலங்கு பூட்டிய செங்கோடனும், அவனைப் போலீஸார் கொண்டு போனபோது தன்னைப் பார்த்த பார்வையும், அவன் சொன்ன வார்த்தையும் ஒரே குழப்பமாக வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருந்தன. எல்லாவற்றிலும் அதிகமாக அவள் மனக் கண் முன்னல் ஒரு செப்புக் குடம்,—உள்ளே காலியான செப்புக் குடம்,—வாயைப் பெரிதாகத் திறந்து கொண்டு காட்சி அளித்தது. அந்த வெறுங்குடம் மனக்கண் முன் தோன்றிய போதெல்லாம் அவளுடைய அடிவயிற்றில்என்னமோவேதனைசெய்தது.

இத்தகைய நிலைமையிலேதான் போலீஸ்காரர் வந்தார். அவரைப் பார்த்ததும் செம்பா பரபரப்புடன், "வாருங்கள்! நீங்கள் வருவீர்கள் என்று எதிர்பார்த்தேன்!" என்ருள்.

"அது எப்படி! எதற்காக?" என்று கேட்டார் போலீஸ்காரர்.

"எதற்காக, எப்படி என்று உங்களுக்கே தெரியும்!" என்ருள் செம்பா.

"ஓகோ! அப்படியா?"

"உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும் என்றிருந்தேன். கேட்கட்டுமா?"

"பேஷாய்க் கேட்கலாம்."

"அவரு எதற்காக 'நான் கொலை செய்தேன்' 'நான்தான் கொலை செய்தேன்' என்று கத்தினர்? என்னைக் காப்பாற்றுவதற்காகத்தானே?"

"ஆமாம்."

"நான் செய்திருப்பேன் என்று அவருக்கு எப்படித் தோன்றியது?"

"நீ குடிசையிலிருந்து வெளியேறியதைச் செங்கோடன் பார்த்துவிட்டான். அதைத் தவிர இன்னொரு காரணமும் உண்டு. அவன் லாந்தரைக் கொளுத்திக் கொண்டு குடிசைக்குள் புகுந்தபோது வாசற்படியில் ஒரு உடைந்த வளையல் கிடந்தது. அது உன்னுடையதுதான் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது. பின்னே தெரியாமல் இருக்குமா?"

செம்பா தன்னுடைய கைகளைப் பார்த்துக் கொண்டாள்.

"உன்னுடைய ஒரு கையில் சிவப்பு வளை இருக்கிறது; இன்னொரு கையில் இல்லை. மற்றவர் கண்ணில் பட்டிருந்தால் ஆபத்தாய்ப் போயிருக்கும்!" என்ருர் போலீஸ்காரர்.

"அப்புறம்? அந்த வளையல் என்ன ஆயிற்று?" என்று செம்பா ஆவலோடு கேட்டாள்.

"செங்கோடன் அதை ஒருவரும் அறியாமல் சட்டென்று மடியில் எடுத்து வைத்துக்கொண்டு கேணிக் கரைக்கு ஓடிவந்து மடியை உதறினன். வளையல் கேணியில் விழுந்தது."

"எவ்வளவு சாமர்த்தியமாகச் செய்திருக்கிருர்? என் பேரில் என்ன கரி

சனம்? என்ன அன்பு? அவருக்கு என்னால் இப்படி நேர்ந்துவிட்டதே?'' என்று சொல்லி விட்டுச் செம்பா கண்ணீர் பெருக்கினான்.

"வேண்டாம், செம்பா! உன் செங்கோடனுக்கு ஆபத்து ஒன்றும் வராது. அவனை விடுதலை செய்து கொண்டு சேர்க்க நான் இருக்கிறேன். வருத்தப்படாதே!'' என்றார் போலீஸ்காரர்.

செம்பா போலீஸ்காரரை ஏறிட்டுப் பார்த்து, "நான் அதற்காக வருத்தப்படவில்லை. அவரை நீங்கள் காப்பாற்றி விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும். அப்படி நீங்கள் செய்யாவிட்டால் நான் கோர்ட்டில் வந்து நடந்ததை நடந்தபடி சொல்கிறது என்று தீர்மானித்திருந்தேன்.''

போலீஸ்காரர் சிறிது திடுக்கிட்டு, "அதெல்லாம் வேண்டாம். நீ கோர்ட்டுக்கு வந்தால் வீண் சிக்கல் ஏற்படும். செங்கோடனைக் காப்பாற்றுவதற்கு நான் ஆயிற்று!'' என்றார்.

"அதற்காக நான் வருத்தப்படவில்லையென்றுதான் சொன்னேனே!''

"பின்னே எதற்காக வருத்தம்? எதற்காகக் கண்ணீர்?''

"அப்படி எனக்காகத் தன் உயிரைக் கொடுக்கத் துணிந்தவருக்கு நான் பதில் என்ன சொல்லப் போகிறேன்? திரும்பி வந்ததும் பணக் குடம் எங்கே என்று கேட்பாரே?''

"ஏன்? பணக் குடம் எங்கே? பத்திரமாய் வைத்திருக்கிறாய் அல்லவா?''

"குடம் பத்திரமாக அய்யனார் கோயில் குட்டையில் கிடக்கிறது. அதனால் என்ன பிரயோஜனம்? அந்தக் குடத்தை அவசரமாய்த் தூக்கிக்கொண்டு ஓடினேன் அல்லவா? கொஞ்ச தூரம் போன பிறகுதான் அது கனக்கவே இல்லை என்பது ஞாபகத்துக்கு வந்தது. உடனே நிலா வெளிச்சத்தில் குடத்துக்குள் பார்த்தேன். குடம் காலியாயிருந்தது! அதைப் பார்த்து என் மூளை குழம்பிவிட்டது. நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தேன். ஊர்க்காரர்கள் ஓடி வரும் சத்தம் கேட்டுக் குடத்தைக் குட்டையில் போட்டுவிட்டு அவர்களோடு நானும் சேர்ந்துகொண்டேன். கவுண்டர் விடுதலையாகித் திரும்பி வந்து 'குடத்தில் இருந்த பணம் எங்கே?' என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவேன்? நான் பணத்தைப் பத்திரமாய் வைத்திருப்பேன் என்ற நம்பிக்கையுடன் அவர் இருப்பாரே? அவருடைய கேஸுக்காகக் காலணா செலவழிக்க வேண்டாம் என்று சொல்லியனுப்பியிருக்கிறாரே? அரும் பாடுபட்டுச் சேர்த்த எண்ணூறு ரூபாயும் போய்விட்டது என்று தெரிந்தால் அவருக்கு எப்படியிருக்கும்? என்னிடம் அவருக்குள்ள அன்பெல்லாம் விஷமாய் மாறி விடுமே!'' என்று செம்பா புலம்பினாள்.

(அடுத்த இதழில் முடியும்)

## அஸ்திவாரக் கல் நாட்டு விழா

புரட்டாசி மாதம் பிறந்துவிட்டால் போதும்; "வடக்குமலையானுக்குக் கோவிந்தா!'' "ஏழுமலையானுக்குக் கோவிந்தா!'' "தீராத வினை தீர்க்கும் திருப்பதி வேங்கடேசப் பெருமாளுக்குக் கோவிந்தா, கோவிந்தா, கோவிந்தா!'' என்று மூலைக்கு மூலை பக்தர்கள் பரவசத்துடன் கோஷமிட ஆரம்பித்து விடுவார்கள். பட்டணத்திலிருந்து பட்டிக்காடு வரை படித்தவர்களும் பாமரர்களும் கும்பல் கும்பலாக ஆண் பெண் வித்தியாசமின்றி மேற்படி நாமாவளியைச் சொல்லிக்கொண்டே தம்மை மறந்து திருப்பதிக்குச் சென்று கலியுகக் கடவுளாகிய ஸ்ரீ வேங்கடாசலபதியைச் சேவித்துவிட்டு வருவார்கள்.

இவ்வளவு பெருமை வாய்ந்த அகில இந்தியப் புண்ணிய க்ஷேத்திரமாகிய திருமலையில் தண்ணீருக்குப் பஞ்சம் இருக்கலாமா? தண்ணீரை விலை கொடுத்துத்தான் வாங்கலாமா! இந்த நிலைமையைத் தவிர்ப்பதற்காகத் திருப்பதி—திருமலை தேவஸ்தானக் கமிட்டியார் திருமலையில் குடி தண்ணீர் சப்ளைத் திட்டமொன்றை சுமார் ஏழு லட்ச ரூபாய் செலவில் நிறைவேற்றி வைக்க ஆரம்பித்திருக்கிறார்கள். திருமலைக்கு அருகில் உள்ள பாபநாசம் அருவியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து திருமலையில் தேக்கி வைக்கப் போகிறார்கள். இந்தத் திட்டத்துக்குச் சென்னை கவர்னர் ஜூலை மாதம் 30-ந் தேதியன்று அஸ்திவாரக் கல் நாட்டியிருக்கிறார். மந்திரிகள் கனம் டாக்டர் ராஜனும், கனம் பக்தவத்ஸலமும் மேற்படி விழாவில் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தார்கள்.

திருமலை திருப்பதி தேவஸ்தானக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு, பவநகர் மகாராஜாவையும் மந்திரிகளையும் வரவேற்று உபசரித்து, சுவாமி தரிசனம் செய்வித்தார்.

திருப்பதி மலையையும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளின் ஆலயத்தையும் மேற்படி அஸ்திவார விழாக் காட்சிகளையும் அடுத்த பக்கங்களில் வெளியாகியுள்ள படங்களில் காணலாம்.



1. திருப்பதிக்கு விஜயம் செ
கவர்னர் தம்பதிகளைத் திருப்பதி-
மலை தேவஸ்தான தலைவர் ஸ்ரீ
கடசாமி நாயுடு வரவேற்று அ
துச் செல்கிறார்.

2. ஸ்ரீ வேங்கடேசப் பெரும
புதுக் கோபுர வாசலின் அ
தோற்றம்.

3. சிற்ப வேலைப்பாடுகள் நிறை
ஸ்ரீ வேங்கடேசப் பெருமா
வெள்ளி ரதம்.











●○●

. மலை அடிவாரத்திலுள்ள ஸ்ரீ
ாவிந்தராஜ ஸ்வாமி கோயில்.

. சுவாமி புஷ்கரணி.

. வாகன மண்டபத்தில் எழுந்
ளியுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரப்
நமாள்—உத்ஸவர்.

. சுமார் 2,800 அடி உயரமுள்ள
ப்பதி மலையும் ஸ்ரீ வேங்கடேஸ்
ப் பெருமான் கோயில் காட்சியும்.

●○●









9. பெயர் பெற்ற திருப்பதி உண்டி
யில் வருஷத்துக்கு 25 லட்சம் ரூபாய்
தர்களின் காணிக்கை விழுகிறது.

0. திருமலை குடி தண்ணீர் சப்ளை
ட்டத்துக்கு அஸ்திவாரக் கல் நாட்ட
த கவர்னர் பவநகர் மகாராஜாவைத்
ருப்பதி—திருமலை தேவஸ்தானக்
மிட்டித் தலைவர் ஸ்ரீ வெங்கடசாமி
யுடு வரவேற்றுப் பேசுகிறார்.

●○●



# தமிழர் துறைமுகம் திறக்கப்படுமா?

கொழும்பு, ஆகஸ்ட் 5உ

தனிப்பட்ட தொழில் வர்த்தக ஸ்தாபனங்களில் வேலை பார்க்கும் சிப்பந்திகளை இலங்கையர் மயமாக்கும் மந்திரி பதவியை ஸ்ரீ குணசிங்காவுக்குப் பிரதம மந்திரி அளித்திருக்கிறார். இப்பதவிக்கு ஸ்ரீ குணசிங்காவை விடப் பொருத்தமானவர் வேறு யாருமே இருக்க முடியாது! 1939-ம் ஆண்டில் அரசாங்க சேவைகளிலிருந்தவர் ஸ்ரீ குணசிங்கா. இந்தியர்களைக் கட்டுப்படுத்தும் குடியேற்ற வெளியேற்றச் சட்டம் இயற்றுவதற்குத் தாமே ஜவாப்தாரி என்று அவர் சமீபத்தில் பேசிய கூட்டமொன்றில் கூறினார். சிறிது காலமாக அவர் தோட்டங்கள் தோறும் சென்று இலங்கை இந்தியர் காங்கிரஸ் காந்தீயக் கொள்கைகளுக்கு முரண்பட்டதென்றும் மகாத்மாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றும் தமது தொழிற் கட்சியில் இந்தியத் தொழிலாளர் அனைவரும் சேரவேண்டுமென்றும் பிரசாரம் செய்து வருகிறார்.

புதிய மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டதும் ஸ்ரீ குணசிங்கா சில அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கிறார். இலங்கையர்களாகப் பதிவு செய்து கொள்ள முடியாத இந்தியர்கள் இலங்கையில் தங்களுடைய வழக்கமான தொழில்களைத் தங்கு தடையின்றி நடத்திவர அனுமதிக்கப்படுவார்கள் என்று இந்தியப் பிரதம மந்திரிக்கு இலங்கைப் பிரதம மந்திரி வாக்குறுதி யளித்தார் அல்லவா? அதைச் சுட்டிக் காட்டியபொழுது, "இந்த வாக்குறுதி இலங்கை அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துமென்று தோன்றவில்லை. ஏனெனில் அப்பொழுது நடந்த பேச்சு வார்த்தைகள் முறிந்து போய் விட்டன" என்று ஸ்ரீ குணசிங்கா கூறியிருக்கிறார். இந்த அபிப்பிராயம் இலங்கையிலும் இந்தியாவிலுமுள்ள இந்தியர்களுக்கு மிகுந்த கவலையைக் கொடுக்குமென்பது நிச்சயம். வேலையிலிருந்து நீக்கப்படும் சிப்பந்திகளுக்கு முதலாளிகளாகப் பார்த்து இரக்கம் வைத்து ஏதாவது நஷ்ட ஈடு கொடுத்தாலொழிய அரசாங்கம் எவ்வித நஷ்ட ஈடும் கொடுக்கப்போவதில்லை யென்றும் தொழில் வர்த்தக ஸ்தாபன சிப்பந்திகளை இலங்கையர் மயமாக்குவதில் தனிப்பட்ட முதலாளிகள் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும் மகாத்மாவின் அடிச்சுவடுகளை அப்படியே பின் பற்றுவதாகச் சொல்லிக் கொள்ளும் ஸ்ரீ குணசிங்கா கேட்டுக் கொண்டிருக்கிறார்.

## துறைமுகம் திறக்கப்படுமா?

வட இலங்கையிலுள்ள துறைமுகங்களில் ஒன்றைப் பிரயாணிகளின் போக்குவரத்துக்கு மறுபடியும் திறக்க வேண்டும் என்ற கிளர்ச்சி நீண்ட காலமாகவே நடந்து வரும் அதற்கு அரசாங்கம் செவி சாய்ப்பதாயில்லை. சென்ற வாரம் பார்லிமெண்டில் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி விவாதம் நடந்தபொழுது இதே விஷயத்தை ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம் மீண்டும் வற்புறுத்தினார். யாழ்ப்பாணக் குடா நாட்டில் பிரயாணிகளின் போக்குவரத்துக்கு ஒரு துறைமுகத்தைத் திறப்பது மிகவும் அவசியமென்றும், இவ்விஷயத்தில் அரசாங்கம் தனது வாக்குறுதியை நிறைவேற்றி வைக்கத் தவறிவிட்டதென்றும் ஸ்ரீ செல்வநாயகம் புகார் செய்தார். வட இலங்கைத் துறைமுகத்தைப் பிரயாணிகளின் போக்குவரத்துக்குத் திறப்பது தமிழர்களின் செல்வாக்கைப் பலப்படுத்துவதோடு கொழும்பு துறைமுகத்தின் முக்கியத்துவத்தையும் குறைத்து விடுமென்று சிங்கள ராஜதந்திரிகள் கருதுகிறார்கள்.

## தமிழ்ச் சங்க ஆண்டு விழா

வெள்ளவத்தை தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழா இம்மாதம் 18, 19-ம் தேதிகளில் சைவ மங்கையர்க் கழக மண்டபத்தில் நடைபெறுகின்றது. ஜூன் மாதத்திலேயே நடைபெற்றிருக்க வேண்டிய இந்த விழா "கல்கி" ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அப்போது வர இயலாததை உத்தேசித்து ஒத்தி வைக்கப்பட்டது. ஏற்கெனவே அறிவித்திருந்தபடி 'கவிஞர் பரம்பரை' என்ற விஷயம் பற்றி ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி மகாநாட்டில் பேசுவார். இந்த மகாநாட்டில் ஸ்ரீ பெரியசாமி தூரனும் கலந்து கொள்ளுவார் என்று தெரிகிறது. இலங்கையில் தமிழ்த் திருவிழா நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்வதற்காகக் கல்கியுடன் ஸ்ரீ தூரன் இலங்கைக்கு வருகிறார். தமிழ் விழா அநேகமாக யாழ்ப்பாணத்தில் நடைபெறக் கூடுமென்றும் இது சம்பந்தமான பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்ய ஒரு கமிட்டிக் கூட்டம் கொழும்பில் நடைபெறுமென்றும் தெரிகிறது. —ஜுவி.

அட்டைப்பட விளக்கம்

# தொழிலதிபர் சேஷசாயி

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டுப் பட்டணம் ஒன்றினுள் ஒரு கிராமவாசி நுழைந்தார். நுழைந்த நேரம் மாலை ஏழு மணி இருக்கும். எங்கும் 'கும் கும்' என்று இருள் சூழ்ந்திருந்தது. தெருவோ மேடும் பள்ளமாக, கல்லும் முள்ளுமாக இருந்தது. அந்தப் பாதையில் தன்னந் தனியாகப் போய்க்கொண்டிருந்த அந்தக் கிராமவாசி எதிரில் யாரோ வரும் சத்தம் கேட்கவே சற்றுத் தயங்கினார். இருளில் கூர்ந்து பார்த்தார். யாருமில்லை—இரண்டு மாடுகள் வந்து கொண்டிருந்தன. அவற்றிற்கு வழி விடும் நோக்கத்துடன் சற்று ஒதுங்கினார். அவ்வளவு தான்; 'படார்' என்ற சத்தம் கேட்டது. மண்டை ஏதோ ஒரு கல்லின்மீது மோதி விட்டது என்பதை யுணர்ந்தார். மண்டையை அப்படியே பிடித்துக் கொண்டு அந்த ஊரில் யார் வீட்டுக்குப் போகவேண்டுமோ அவர் வீட்டுக்குத் தட்டுத் தடுமாறிக்கொண்டு போய்ச் சேர்ந்தார்.

மறுநாள் காலை அவர், எதன்மீது மோதிக் கொண்டார் என்பதைப் பார்க்க வந்தார். அங்கே ஒரு லாந்தர் தூண்தான் நின்று கொண்டிருந்தது!

இவ்விதம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டுப் பெரிய பெரிய நகரங்களில்கூடத் தெரு விளக்குகள் என்ற பெயரில் வெளிச்சம் காட்டாத கல் தூண்களே ஏராளமாக நின்று ஊருக்குப் புதிதாக வந்தவர்களின் மண்டைகளைப் பதம் பார்த்து வந்தன. நமது முனிஸிபாலிடிகளோ, கிராமப் பஞ்சாயத்துகளோ விளக்கேற்றும் பாபத்தில் போவதில்லை என்று உறுதி கொண்டிருந்தன.

இந்தச் சமயத்தில்தான், அதாவது 1923-ம் ஆண்டில், 'ஊரில் வெளிச்சம் போடுகிறோம்' என்று கிளம்பினார்கள் இருவர். அவர்கள்தான் ஆர். சேஷசாயி, வி. சேஷசாயி என்பவர்கள்.

எதிர்ப்பின்றி எந்த நல்ல காரியமும் நடப்பதில்லை யல்லவா? அதற்கேற்ப இந்த உத்தமமான கைங்கரியத்திற்கும் எதிர்ப்பு இருக்கத்தான் செய்தது. அந்த எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் சேஷசாயிகள் மின்சாரத்தைத் தெரு விளக்குகளுக்கும் வீடுகளுக்கும் ஆஸ்பத்திரிகளுக்கும் மில்களுக்கும் வழங்கினார்கள். எங்கும் ஒளியும் மகிழ்ச்சியும் பெருகச் செய்து விட்டார்கள். தமிழ்நாட்டில் தஞ்சை, திருச்சி, ராமநாதபுரம் ஆகிய ஜில்லாக்களிலும், புதுக்கோட்டையிலும் மின்சாரப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடச் செய்து விட்டார்கள். இந்த அரும் பணியை ஆற்றிவர 'சவுத் மதராஸ் எலக்டிரிக் சப்ளை கார்ப்பரேஷன்' என்ற ஸ்தாபனத்தைத் தோற்றுவித்தார்கள்.

இந்தக் கார்ப்பரேஷன் இது வரை சுமார் 12,000 சதுர மைல்களுக்கு மின்சாரத்தைக் கொடுத்திருக்கிறது. மாவு மில்கள், நெல் மிஷின்கள், தண்ணீர் இறைக்கும் யந்திரங்கள் முதலிய விவசாயிகளுக்கும், கிராம மக்களுக்கும் வேண்டிய யந்திர சாதனங்கள் அத்தனைக்கும் மின்சார விசை யளித்து வருகிறது.

இப்படி யெல்லாம் மின்சாரத்தினால் பல சௌகரியங்கள் செய்து வரும் சமயத்தில் (1934-ல்) மூத்தவரான ஆர். சேஷசாயி அகால மரணமுற்றார். அதன் விளைவாக இருவருமாகத் தொடங்கிய காரியப் பொறுப்புகளை ஸ்ரீ வி. சேஷசாயி அவர்களே ஏற்க வேண்டியதாயிற்று.



ரஸாயன எரு உற்பத்தி செய்யும் முக்கியமான யந்திரங்களில் ஒரு பகுதி



ரஸாயன எரு உற்பத்தி செய்ய உதவும் மின்சார நிலையம்

இது வரை மின்சார சப்ளை செய்து வந்த பொறுப்புடன் ஸ்ரீ வி. சேஷசாயி இன்னும் சில தொழில்களை ஆரம்பித்துப் புதுப் பொறுப்புக்களை ஏற்றார்.

ஸ்ரீ வி. சேஷசாயி, 1940-ம் வருஷம் ரசாயனப் பொருள் உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டு, 'மேட்டூர் கெமிகல்ஸ்' என்ற பெரிய ஸ்தாபனத்தை ஸர் என். கோபாலஸ்வாமி ஐயங்கார் போன்றவர்களின் உறுதுணையுடன் ஆரம்பித்தார். மேற்படி ஸ்தாபனத்தில் காஸ்டிக் சோடா, பிளீச்சிங் பவுடர், ஸல்ப்யூரிக் ஆஸிட் ஆகிய ரசாயனப்பொருள்களும்,வனஸ்பதி, வாசனைச் சோப்புகள், துணி தோய்க்கும் சோப்புகள் ஆகிய பிரதிதின உபயோகத்துக்கு வேண்டிய பல்வேறு சாமான்களும் செய்யப்படுகின்றன.

ஸ்ரீ வி. சேஷசாயி ஈடுபட்டுள்ள தொழில்கள் அனேகம். அவற்றில் மிக முக்கியமானது, திருவாங்கூர் ராஜ்யத்தில் ரசாயன எருக்கள் செய்யும் பிரம்மாண்டமான F.A.C.T. என்னும் ஆலையை, ஆசியாவிலேயே மிகப்பெரிய ஆலையை,—தோற்றுவித்ததுதான். பஞ்சமும் பட்டினியும் பயமுறுத்தும் இந்நாட்டில் ஒன்று விளையும் இடத்தில் ஒன்பதாக விளையச் செய்யும் ரசாயன உரங்களைத் தயாரித்து நாட்டுக்கு அளிப்பது எத்தகைய பரோபகாரம்? அத்தகைய பரோபகாரச் செயலில் முன்னணியில் நின்று ஈடுபட்டவர் ஒரு தமிழர் என்பதை அறியும்போது நமக்கு எவ்வளவு பெருமிதம் ஏற்படுகிறது!

சமீபத்தில் மலையாள நாட்டில் குந்தரா என்னுமிடத்தில் மின்சார சக்தியை வெகு தூரத்து இடங்களுக்கு ஏந்திச் செல்லும் அலுமினியக் கம்பிகளைச் செய்யும் தொழிற்சாலையை ஸ்தாபித்திருக்கிறார்கள். இந்தத் தொழிலிலும் ஸ்ரீ வி. சேஷசாயி பெரும் பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்.

* * *

தேச முன்னேற்றத்துக்கான பல நவீன தொழிற்சாலைகளைத் தோற்றுவித்துத் தமிழ்நாட்டின் பெருமையை உயர்த்தியவர் சேஷசாயி. தொழில் துறையில் ஸ்ரீ சேஷசாயி செய்திருக்கும் சேவை, இந்திய சுதந்திர சர்க்காரின் கவனத்தையும் கவர்ந்திருக்கிறது. நமது மத்திய அரசாங்கத்தாரின் தொழில் அபிவிருத்தி ஆலோசனைக் கமிட்டியில் ஸ்ரீ சேஷசாயியையும் அங்கத்தினராக நியமித்திருக்கிறார்கள்.

நாளது ஆகஸ்டு மீ 12உ ஸ்ரீ சேஷசாயிக்கு அறுபது வயது நிரம்பப்போகிறதாம். விமரிசையான முறையில் சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடப் பிரமுகர்கள் பலர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

'ஸ்ரீ சேஷசாயி சஷ்டியப்த பூர்த்தி விழாக் கமிட்டி' என்று ஒரு கமிட்டி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இக்கமிட்டியினர் ஸ்ரீ சேஷசாயி அவர்கள் பெயரில் ஒரு 'நுட்பக் கலைக் கூடம்' (Technological Institute) ஏற்படுத்தத் திட்டமிட்டிருக்கின்றனர். இந்த நல்ல முயற்சிக்குப் பொதுஜன ஆதரவு பூரணமாக இருக்கும் என்று நம்புகிறோம்.

அறுபது வயதைப் பூர்த்தி செய்யும் ஸ்ரீ வி. சேஷசாயி, நூறு வயதையும் பூர்த்தி செய்து, இடைக்காலத்தில் தேசத்துக்கு ஆக்கம் அளிக்கக்கூடிய வேறு பல தொழிற்சாலைகளைத் தோற்றுவித்து, பல்லாயிரக் கணக்கான மக்களின் மனோ பீஷ்டத்தையும் நிறைவேற்றிக் கொடுக்க இறைவன் அருள்புரிவாராக.

# இரட்டை யோகம்

ஏ. எஸ். ராகவன்

ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த ராமசாமி ஐயர் அலுப்புடன் தெருவைப் பார்த்தார். மணி இரண்டு அடித்தது. காலையில் காப்பி குடித்துவிட்டு வந்து உட்கார்ந்தது, மணி இரண்டு அடிக்கும் வரை தலை நிமிர முடியாத வேலைத் தொல்லை! பசியோ வயிற்றைக் கிள்ளுகிறது.

குடையைக் கையில் எடுத்துக் கொண்டு புறப்பட்டார். இரும்புப் பெட்டியை இழுத்துப் பார்த்தார். பிறகு எதிரிலிருந்த கணக்குப் பெட்டியையும் பூட்டிப் பையனிடம் சாவியைக் கொடுத்து விட்டு, இரும்புப் பெட்டிச் சாவியை உள்ளேகொண்டுபோய் வைத்துப் பூட்டி விட்டுக் கிளம்பினார்.

உள்ளே செட்டியார் குறட்டை விடும் சப்தம் கேட்டது. ஐயருக்கு ஒரு விஷயத்தில் பலத்த சந்தேகம். படுக்கையில் படுத்தால் தூக்கம் வர அவருக்குக் குறைந்தது அரைமணியாவது ஆகிறது. அதற்குள் எவ்வளவோ யோசனைகள், எவ்வளவோ விசனங்கள் வந்து மோதுகின்றன. ஆனால் செட்டியாரோ தலையைச் சாய்த்ததும் குறட்டை விட ஆரம்பித்து விடுகிறாரே!

வெய்யில் கோரமாக இருந்தது. குடையைப் பிரித்து நடையைக் கட்டினார் ராமசாமி ஐயர். குடையிலோ பல ஓட்டைகள்! ஒரு புதுக்குடை வாங்க வேண்டுமென்று அவரும்தான் ஆறுமாத காலமாக எண்ணிக் கொண்டிருக்கிறார். ஆனால் பெருகிவரும் குடும்பத் தொல்லையில் குடை வாங்க எங்கே முடிகிறது? மேலும் இப்பொழுதுதான் சாதாரணக் குடை கூடப் பத்து ரூபாய் ஆகிறதே! அவ்வளவு ரூபாய்க்கு அவர் எங்கே போவது?

வழி நெடுகத் தன்பொருளாதாரப் பிரச்னையைப் பற்றிய குழப்பங்களிலேயே சிந்தனையைக் குழும்பவிட்டுக் கொண்டு சென்றார் அவர். வீட்டை அடைந்ததும், சுபச் செய்தியாக மதுரையிலிருந்து அவருடைய மைத்துனன், கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்டிருந்த செய்தியைத் தாங்கிய கடிதம் அவருக்காகக் காத்திருந்தது. அவனும் ஒரு கடையில்தான் வேலையில் இருக்கிறான்! அப்படியிருந்தும் அவன் கையில் பணம் நிறைய இருக்கிறது. என்ன காரணம்? எதற்கும் அதிர்ஷ்டம் என்று ஒன்று வேண்டாமா?

கைகால்களை அலம்பிக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தார். அவருடைய மனைவி பாக்கியம் சாதம் பரிமாறிக் கொண்டே, "என்னு! செட்டியாரிடம் கேட்டுப் பாருங்களேன்! இந்த வருஷமாவது நம்ம ருக்குவுக்குக் கல்யாணம் பண்ணிவிட வேண்டாமா? எத்தனை நாளைக்குத்தான் வீட்டில் வைத்திருக்க முடியும் வளர்ந்த பெண்ணை?" என்று கேட்டாள்.

ருக்குவைப் பற்றிய ஞாபகம் அப்போதுதான் வந்தது அவருக்கு. எவ்வளவு அழகு அவள்! அத்துடன் அவளுடைய புத்தி கூர்மைதான் எவ்வளவு நுட்பமானது! ஆனால் இவ்வளவு அழகும், சாதுர்யமும் உள்ள பெண்கள் ஏன் தான் ஏழைகள் வீட்டில் வந்து பிறக்கின்றனவோ?

'ஊன்' கொட்டியபடியே ராமசாமி ஐயர், "ஏற்கெனவே கடையில் கிட்டத்தட்ட ஐந்நூறுக்குப் பற்று இருக்கிறது. வரவர வியாபாரம் மோசம் என்று செட்டியார் வேறு அலுத்துக் கொள்ளுகிறார்.... அப்படி இருக்கும்போது அவரை எப்படிப் பணம் கேட்பது?" என்றார்.

பாக்கியம் கவலையுடன் முணுமுணுத்தாள். "ஆமாம்....நீங்களும்தான் காலையிலிருந்து இரவுவரை மாடு போல உழைக்கிறீர்கள். என்ன பிரயோஜனம்? அந்த பகவான்தான் கண்ணைத் திறக்கணும்!" என்றாள் கண்ணீர் விட்டபடியே.

கவலையுடன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வாசல் திண்ணையில் வந்து உட்கார்ந்தார் ஐயர். வெய்யில் உக்கிரமாகக் கொளுத்திக் கொண்டிருந்தது. வெற்றிலைப் பாக்குப் போட்டுக் கொண்டு சாய்வுத் திண்ணையில் சாய்ந்ததும் மறுபடியும் அவருக்கு ருக்குவின் ஞாபகம் வந்தது. ஆம். அவளுக்கு இந்த வருஷம் கட்டாயம் கல்யாணம் செய்துதான் ஆக வேண்டும். ஆனால் அதற்குக் கையில் குறைந்தது ஆயிரம் ரூபாயாவது வேண்டாமா? குடும்பம் இப்போது இருக்கும் நிலையில் அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது? இந்தப் பிரச்னையை விட மாப்பிள்ளைப் பிரச்னை பலமானதாயிற்றே! அப்போது ஐயருக்குத் தன் தமக்கையின் பிள்ளை அருணாசலத்தின் நினைவு வந்தது. அவன் ஏதோ மோட்டார் கம்பெனியில் வேலை பார்க்கிறானாம். பையன் நல்லவன். அவன் தாயார் பட்ட கஷ்டங்களுக்கு அவன் இவ்வளவு சம்பாதிப்பது எவ்வளவோ மேலானது. ஆம், அவன் ருக்குவுக்கு ஏற்ற சரியான ஜோடிதான்!

* * *

"சாமி, செட்டியார் கூட்டிக்கிட்டு வரச் சொன்னாருங்க!" என்று அழைத்தபடி முத்து வந்து நின்றான்.

ராமசாமி ஐயருக்கு ஆச்சரியமாயிருந்தது. அவர் கடையில் வேலை பார்த்து வந்த இத்தனை வருஷங்களில் ஒரு முறை கூட இப்படி நேர்ந்ததில்லை. சாப்பிட இரண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தால் நான்கு மணிக்குத்தான் திரும்பிச் செல்வார். இதற்கிடையில், அவரைக் கூப்பிடக் கடையிலிருந்து இதுவரை ஆள் வந்ததே கிடையாது.

என்னவோ, ஏதோ என்ற கவலையுடன் ஐயர் உள்ளே சென்று குடையைக் கையிலெடுத்தார். பழைய குடையானதால் பிடி கழன்று கையுடன் வந்து விட்டது. குடை தடாலென்று தரையில் விழுந்தது. "ஒரு புதுக் குடை வாங்கணும்...... பழைய குடையே எத்தனை நாளைக்குத் தான் கட்டிக்கொண்டு அழுவது?" என்று முனகியபடி குடையில்லாமலே கடையை நோக்கிக் கிளம்பினார்.

கடையை அடைந்ததும் ஐயருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. செட்டியாரின் முகம் கோபத்தால் துடித்துக் கொண்டிருந்தது. இரும்புப் பெட்டி திறந்திருந்தது. நகைப் பெட்டிகள் கூடக் கலைந்து கிடந்தன. அவருக்கு எதிரில் ஒரு சேட்ஜீ உட்கார்ந்திருந்தார்.

"ஏன் ஐயரே! வைரக் கம்மல் வைத்திருந்த அந்தப் பெட்டியைக் காணுமே, எங்கேயாவது எடுத்து வைத்தீரா?" என்று கேட்டார் செட்டியார்.

ஐயருக்குத் தூக்கி வாரிப் போட்டது. "நேற்று நீங்கள்தானே இரும்புப் பெட்டியிலே வச்சீங்க...அப்புறம் நான் அதைப் பார்க்கவே இல்லையே!" என்றார் குழறியபடியே. அவருடைய கைகால்கள் நடுங்கின. என்ன நேருமோ என்று மார்பு 'பட், பட்' என்று அடித்துக் கொண்டது.

செட்டியாருக்கோ நிலை கொள்ளவில்லை. "என்ன ஐயரே இது? நேத்து மாலை வச்சது இன்னிக்குக் காணுமே! எப்படி மாயமாய் மறைஞ்சு போகும்?" என்றார்.

ராமசாமி ஐயருக்குப் பாவம், அவமானமாயிருந்தது. எத்தனையோ வருஷமாக வேலை செய்திருந்தும் தன் மீதே முதலாளிக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டதே என்ற விசாரம். 'குடும்பத் தொல்லை போதாது என்று இந்தப் பழிச் சொல் வேறா?' என்று அழாத குறையாய், "நான் பார்க்கவே இல்லீங்களே!" என்றார்.

சேட்ஜீ இந்தத் தருணத்தில் எழுந்து, "நான் வரேனுங்க. பிறகு பேசிக்கொள்ளலாம்" என்று சொல்லி விட்டுக் கிளம்பினார்.

இந்த வியாபாரம் தடைப் பட்டதில் நஷ்டம்தான் செட்டியாருக்கு. இரண்டாயிரம் ரூபாய் லாபம் வந்திருக்கும். லாபம் போனால் போகிறது. முதலுக்கும் அல்லவா மோசம் வந்து விட்டது!

வாடிக்கைக்காரர்கள் வந்து விட்டதால் பேச்சை நிறுத்திவிட்டுச் செட்டியார் நகைகளைக் கண்ணாடி மேஜையில் போட்டுப் பேரம் செய்ய ஆரம்பித்தார். ஐயர் எதிரிலிருந்த வெற்றி வேல் முருகன் படத்தை மானசிகமாய் வணங்கியபடியே "நீ தான் காப்பாத்தணும்!" என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

அன்று வழக்கத்தை விட அதிகக் கூட்டம். வியாபார மும்முரத்தில் செட்டியார் நகை தொலைந்து போன விஷயத்தை மறந்து விட்டார். ஆனால் ஐயரோ கணக்குப் புத்தகத்திலே மனம் ஓடாமல் திரும்பத் திரும்பத் தன் குடும்பத் தொல்லைகளிலும், வேலை போய்விடுமே என்ற கவலையிலுமே உழன்று கொண்டிருந்தார்.



மணி எட்டாயிற்று. செட்டியாருக்குக் கொஞ்சம் ஓய்வு கிடைத்தது. ஆனால் அதற்குள்ளாகக் கடை வாசலில் கார் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இறங்கியவர்களைக் கண்டதும் செட்டியாரின் முகம் மலர்ந்தது. "வாங்க, வாங்க!" என்று எல்லாப் பற்களும் வெளியே தெரிய வரவேற்றார். அவர்கள் செட்டியாரின் உறவினர்கள். நல்ல அந்தஸ்தில் உள்ளவர்கள் வேறு. அவர்களுக்காகக் காப்பி வரவழைத்தார் செட்டியார். பிறகு எல்லோரும் கிளம்பியதும் செட்டியார் வழக்கம் போலக் கடைச் சாவியை வாங்கிக் கொள்ளாமலே காரில் வீட்டுக்குப் போய்விட்டார். ஆகவே, கடையைப் பூட்டிக்கொண்டு ஐயரே செட்டியார் வீட்டுக்குச் சென்றார்.

"ஏது, ஐயரு ரொம்ப அபூர்வமாய் வீட்டுப் பக்கம் வந்தது?" என்று கேட்டாள் செட்டியாரின் மனைவி.

"வராமல் என்னம்மா?..." என்றார் ராமசாமி ஐயர்.

செட்டியாரின் கடைசிப் பிள்ளை சுப்பு ஓடி வந்து அவர் காலைக் கட்டிக் கொண்டான். அவனை இடுப்பில் எடுத்துக் கொண்டு ஐயர், "மகா துஷ்டப் பயல்! கடைக்கு வந்தால் ஒரு சாமானை வைத்த இடத்தில் இருக்க விடமாட்டேன் என்கிறான்..." என்றார்.

"வீட்டிலே மட்டும் என்ன? அதுக்கு மேலே ஆட்டி அடைக்கிறான். சின்ன ஆச்சியை அவன் படுத்தற பாட்டிலே பிரசவத்துக்கு வந்திருக்கும் அந்தப் பொண்ணு மாமியா வீட்டுக்கே போயிடும் போல இருக்குது" என்று தன் பிள்ளையின் பெருமையைப் புராணம் படித்தாள் செட்டியாரின் மனைவி.

அங்கு மேற்கொண்டு நடந்த பேச்சிலிருந்து செட்டியாரின் பெண் பார்வதிக்குக் கல்யாணம் சமீபத்தில் நடக்கலாம் என்ற விஷயம் தெரிய வந்தது.

* * *

தன் வீட்டு வாசலில் கார் ஒன்று நிற்பதைக் கண்டதும் முதலில் ராமசாமி ஐயருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. பரபரவென்று உள்ளே நுழைந்தார். அங்கு அருணாசலம் பெஞ்சியில் உட்கார்ந்திருந்தான். எதிரில் பாக்கியம் உட்கார்ந்திருந்தாள். தாய் மறைவில் பாதி உடல் தெரியும் வண்ணம் நின்று கொண்டிருந்தாள்.



"வா அப்பா, அருணாசலம்! இப்பத்தான் வந்தாயா? வாசலிலே கார் நிற்கிறதே, அதிலேதான் வந்தாயோ?" என்று கேட்டார் ராமசாமி ஐயர்.

"ஆமாம், மாமா!.........நீங்கள் சௌக்கியந்தானே?" என்று வினவினான் அருணாசலம்.

"ஏதோ இருக்கிறோம்.......சரி, உன் அம்மா உடம்புக்கு ஒன்றுமில்லாமல் இருக்கிறாளா?" என்று விசாரித்தார்.

இருவரும் வெகு நேரம்வரை பேசிக் கொண்டிருந்தனர். அருணாசலம் அழகாக வளர்ந்திருந்தான். ராமசாமி ஐயருக்கு முதலில் அடையாளம் தெரியவில்லை. ருக்கு இவ்வளவு அழகாக வளர்ந்துவிட்டாளே என்று அருணாசலம் ஆச்சரியப்பட்டான். ராமசாமி ஐயரின் வறுமையையோ கவலைகளையோ சிறிதும் லட்சியம் செய்யாமல் அந்த இரு இளம் உள்ளங்களும் கூடிவிட்டன.

மறுநாள் கடைக்குப் போகும் போது ஐயருக்கு நடையில் ஜீவனில்லை. "உம்மை வேலையிலிருந்து நீக்கி விட்டேன். இத்தனை நாள் வேலை செய்து விட்டுக் கடைசியில்

இப்படிச் செய்து விட்டீரே!" என்று செட்டியார் கூறுவது போன்ற சிந்தனைகள் எழுந்து மனம் குழம்பினார்.

"நம்ம பார்வதிக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. நேற்று வந்தவங்க பேசி முடிச்சிட்டாங்க" என்றார் செட்டியார்.

ஐயர் 'உச்' கொட்டினார். வேறு சமயமாயிருந்தால் "அப்போது என்பாடு வேட்டை தான்!" என்று கூறியிருப்பார். "கல்யாணம் எப்போது நடத்துவீங்க?" என்று கேட்டு வைத்தார்.

"தை மாதத்தில்தான்!" என்றார் செட்டியார்.

கல்யாணம் நிச்சயமான குதூகலத்தில் அன்றும் செட்டியார் நகை விஷயத்தை எடுக்கவில்லை. முதல் நாள் இரவு ராமசாமி ஐயரின் வீட்டுக்கும் அருணாசலம் காரில்தான் வந்திருக்கிறான், செட்டியாரை நாடிவந்த உறவினர்களைப் போல. ஆனால் செட்டியார் பெண்ணுக்கோ கல்யாணம் நிச்சயமாகி விட்டது! ருக்குவுக்கோ?......ராமசாமி ஐயருக்கு இந்த சமயம் வேலை போகாமலிருந்தால் போதாதா?......

சாப்பிடுவதற்குப் புறப்பட்டார் ஐயர். மணி இரண்டு. காலில் தேய்ந்த செருப்பு காகிதம் போல ஒட்டிக்கொண்டு வந்தது. வழியில் தயங்கித் தயங்கி ஒரு கடையில், "ஏனப்பா, இந்தக் குடை என்ன விலை?" என்று விசாரித்தார். "ஏழரை ரூபாய்... இதோ இது பதினாறு ரூபாய்!" என்றான் கடைக்காரன். 'துணியோ முரட்டுத் துணி. இதற்கா ஏழரை ரூபாய்?" என்று முணுமுணுத்துக் கொண்டே வீட்டை நோக்கி நடந்தார்.

சாப்பாட்டை முடித்துக்கொண்டு வாசல் திண்ணையில் வந்து படுத்தார் ஐயர். பாக்கியமும், ருக்குவும் என்னவோ பேசிக் கொண்டிருந்தனர். அவருடைய கவலையை அவர்கள் என்ன கண்டார்கள்?

மறுபடியும் அதே கவலைகள், அதே விசனங்கள்!

"ஐயரே!"

வாசலில் கடைப் பையன் முத்து நின்று கொண்டிருந்தான்.

அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து "என்னடா?" என்று கேட்டார் ஐயர்.

"முதலாளி கூட்டிக்கிட்டு வரச் சொன்னாருங்க" என்றான் அவன்.

'சரி, சீட்டுக் கிழிந்தது!' என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டார் ஐயர்.

பாக்கியம் பழைய குடையைக் கொண்டு வந்து கொடுத்தாள். அவள் அதன் பிடியைச் சரி செய்திருந்தாள்.

தலை தெறிக்கக் கடையை அடைந்தார் ஐயர். அங்கு செட்டியார் பல் எல்லாம் வெளியே தெரியச் சிரித்தபடி கல்லாவில் அமர்ந்திருந்தார். "ஐயரே, நேற்று உங்களைக் கண்டபடி பேசி விட்டேன். மன்னிக்கணும்......" என்றார் செட்டியார்.

தன் காதுகளையே நம்ப முடியாமல் எதிரிலிருந்த வெற்றிவேல் முருகனின் படத்தைப் பார்த்தார் ஐயர்.

"அந்த லேட் குறைந்த விலைக்குத் தட்டிக்கொண்டு போய்விடலாம் என்று பார்த்தான். அதை அறிந்து நீங்க இந்தப் பழைய தஸ்தாவேஜுப் பெட்டியிலே போட்டு வச்சிருக்கிறீங்க. அதைத் தெரிஞ்சுக்காமல்......" என்று மேலும் என்னென்னமோ சொன்னார் செட்டியார்.

ஐயருக்கு மெதுவாக விஷயம் புரிந்தது. வைரக்கம்மல் கிடைத்து விட்டது என்பதை அறிந்தார். அது இரும்புப் பெட்டியை விட்டுத் தஸ்தாவேஜுப் பெட்டிக்கு எப்படி வந்தது என்பதுதான் அவருக்கு விளங்கவில்லை.

செட்டியார் அவரை அருகில் வரும்படி சமிக்ஞை செய்தார். காதோடு ரகசியமாக, "இப்போ நம்ம மாவன்னா கானா இதே கம்மலை பதினைஞ்சாயிரத்துக்குக் கேக்கறாரு. நல்ல வேளை! நேற்று லேட்டுக்குக் கொடுத்திருந்தால் இரண்டாயிரம் நஷ்டம்... இதோ பாருங்க, இந்த லாபம் உங்களாலேதான் வந்தது.......அதனாலே லாபத்துலே பாதி உமக்கு" என்றார்.

அதைக் கேட்ட ராமசாமி ஐயர் கந்தர்வலோகத்துக்கே போய்விட்டார். வெற்றிவேல் முருகன் படத்தைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

அன்று மாலை செட்டியார் வழக்கம் போலத் தன் கடைக்குட்டி கப்புவை மடியில் வைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தார். அவனோ எதிரிலிருந்த இரும்புப் பெட்டியிலிருந்த சாமான்களைப் 'பதம்' பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த ஐயருக்கு நகை எப்படி இரும்புப் பெட்டியிலிருந்து மாயமாய் மறைந்தது என்பதும் புரிந்து விட்டது.

* * *

இரவு வீடு திரும்பும்போது ஐயர் புதுக்குடையுடன் திரும்பினார். இனிமேல் தரித்திரம் ஏன்? அவருக்குத்தான் யோகம் அடித்து விட்டதே!

வீட்டிற்குள் நுழையும்போது ஐயரின் காதுகளில், "நீங்க கவலைப்படாதீங்கோ, மாமி! இப்போ என் கையில் நிறையப் பணம் இருக்கு. எல்லாக் கடனையும் நானே அடைச்சுடறேன். ருக்குவையும் பண்ணிக்கறேன்" என்று அருணாசலம் சொல்லிக் கொண்டிருந்த வார்த்தைகள் விழுந்தன. இனி ஐயருக்கு என்ன கவலை?

இமயத்திலுள்ள பூக்களின்
குளுமையான பரிமளத்தைப்
போல் மலர்ச்சியைத்
தருவது




குளுமையும் மலர்ச்சியும் தரும் ஹிமாலயா புக்கே டாய்லட் பௌடர் இமயத்திலுள்ள பூக்களைப்போல் பரிமளம் கொண்டது. அது உங்கள் சருமத்தை பட்டுப்போல் மிருதுவாக்குகிறது. அதன் மகிழ்ச்சி தரும் நீடித்து நிற்கும் பரிமளம் உங்களை நாள்முழுவதும் கவர்ச்சியாகவும் மலர்ச்சியுடனும் இருக்கச் செய்கிறது.

# ஹிமாலயா புக்கே
## டாய்லட் பௌடர்

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

KBT. 6-172-55 TM




## 6. விருந்து

இளவரசர்கள் சொன்னதைக் கேட்ட சுல்தான் இலேசாகச் சிரித்து, "பாதகமில்லை! யாருக்குமே மறதி ஏற்படுவது சகஜம்தான்! மறதி ஏற்படாமல் இருப்பதற்கு நான் ஒரு உபாயம் செய்கிறேன்" என்று சொல்லி, இளவரசன் பஹ்மானின் பையில் மூன்று தங்கப் பந்துகளைப் போட்டான். பிறகு, "நீ மறந்து விட்டாலும் உன் சட்டையைக் கழற்றும் போது இந்தப் பந்துகள் உருளும். அப்பொழுதாவது உனக்கு ஞாபகம் வரும் அல்லவா? உடனே உங்கள் சகோதரியைக் கேட்டுக் கொண்டு நாளை இங்கு வாருங்கள்" என்று சொன்னான்.

இளவரசர்கள் வீட்டிற்குத் திரும்பினர். அன்றிரவும் அவர்கள் அவ்விஷயத்தைப் பற்றிப் பேச மறந்திருப்பார்கள். ஆனால் பஹ்மான் சட்டையைக் கழற்றும்போது சுல்தான் கொடுத்த பந்துகள் கீழே உருளவே, சுல்தானின் அழைப்பு அவர்களுக்கு ஞாபகம் வந்தது. உடனே பாரிஜாதம் இருந்த அறைக்குச் சென்று அவளிடம் சுல்தானைச் சந்தித்த விவரம், அவனுடைய அழைப்பு முதலியவற்றைப் பற்றியெல்லாம் விவரமாகக் கூறினர்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் பாரிஜாதத்திற்குக் கவலை ஏற்பட்டது. தன் சகோதரர்கள் அங்கு சென்றால் சுல்தான் அவர்களைத் தனது அரண்மனையில் வேலைக்கு வைத்துக் கொள்வான். தன் சகோதரர்கள் அரண்மனையில் இருந்து விட்டால் தான் தனியாக இருக்க வேண்டுமே என்று எண்ணினாள்.

ஆகவே, அவள் சகோதரர்களுக்கு உடனே பதில் சொல்லாமல் பேசும் பறவையைக் கேட்கலாம் என்று கூறினாள். சகோதரர்களும் அவளுடைய யோசனையை ஒப்புக் கொண்டனர். உடனே பேசும் பறவையின் கூட்டை எடுத்துவரச் சொல்லி அதைக் கேட்டாள். பறவை "உன் சகோதரர்கள் சுல்தான் சொல்படிதான் நடக்க

ரா. நா.

வேண்டும். ஆனால் சுல்தானை உங்கள் வீட்டிற்கு வரும்படி அழைக்க வேண்டும்'' என்று பதில் சொல்லிற்று.

உடனே பாரிஜாதம் பறவையை நோக்கி, "பறவையே! சுல்தான் என் சகோதரர்கள்மீது ஆசைப்பட்டு அவர்களைத் தன்னுடனேயே வைத்துக் கொண்டு விட்டால் நான் தனியாக இருக்க நேருமே, என்ன செய்வது?'' என்று கேட்டாள்.

"அப்படி நடக்காது. நீங்கள் எல்லோரும் நன்றாகத்தா னிருப்பீர்கள். ஆகையால் சுல்தானை அழைக்க வேண்டும். என் யோசனைப்படி நடந்தால் எல்லாம் சுபமாகவே முடியும்'' என்றது பறவை.

அதற்குப் பிறகு பாரிஜாதம் ஆட்சேபணை ஒன்றும் செய்யவில்லை. அடுத்த நாள் இரு இளவரசர்களும் சுல்தானைச் சந்திக்கச் சென்றனர். தங்கள் சகோதரி சுல்தானுடன் அரண்மனை செல்லத் தங்களுக்கு அநுமதி அளித்திருப்பதாக அறிவித்தனர். அவர்கள் சொன்னதைக் கேட்டு சுல்தான் குதூகல மடைந்தான். சிறிது நேரம் வேட்டையாடி விட்டு இரண்டு இளவரசர்களையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு, தன் தலைநகருக்குச் சென்றான்.

சுல்தானின் தலைநகரில் சுல்தானின் இருபுறத்திலும் அழகு வாய்ந்த இரு இளைஞர்கள் பவனி வருவதை மக்கள் கண்டு ஆச்சரிய மடைந்தனர். தங்கள் அரசனுக்கும் இம்மாதிரி இரு இளவரசர்கள் பிறந்திருக்கலாகாதா என்று ஏக்க மடைந்தனர்.

இளவரசர்கள் அரண்மனைக்கு வந்து சேர்ந்ததும் சுல்தான் அவர்களுக்கு ஆடம்பரமான விருந்தளித்தான். விருந்து முடிந்தவுடன் இளைஞர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். எந்த விஷயத்தை எடுத்தாலும் அவர்கள் மிகவும் சாதுர்யமாகப் பேசுவதைக் கண்டு சுல்தான் அளவிலாத ஆனந்தம் அடைந்தான். காலஞ்சென்ற தனது நந்தவனத் தலைவனுக்கு இவ்வளவு புத்திசாலித்தனமும் கம்பீரமும் வாய்ந்த பிள்ளைகள் பிறந்திருப்பதை நினைத்து ஆச்சரியமடைந்தான். தனக்கு இவ்வளவு அருமையான குழந்தைகள் பிறந்திருக்கலாகாதா என்று ஏக்கமடைந்தான். மாலை வேளையில் இளவரசர்களை மகிழ்விக்கச் சுல்தான் பல கேளிக்கை

## கண்ணே நீ பார்!!!






கட்டங்களை உற்றுக் கவனித்தால் வெள்ளைக் கோடுகள் சந்திக்கும் இடத்தில் வெளிர்க் கருப்பு வட்டங்களைக் காணலாம்.




②

Aயும் Bயும் ஒரே அளவு உள்ளவைதான். வைத்திருக்கும் விதத்தினால்தான் வித்தியாசமாகத் தோன்றுகிறது.

② சாய்ந்து இருக்கும் மேல் இரண்டு கோடுகளில், எது சாய்ந்த கீழ்க் கோட்டின் தொடர்ச்சி?



பக்கத்தில் உள்ள சதுரக்கட்டைகளைப் பார்த்தால் மேலிருந்து கீழே பார்ப்பது போலும் உடனே கீழிருந்து மேலே பார்ப்பது போலும் தோன்றும். அப்படித் தோன்றும் வரை முயற்சி செய்யுங்கள்.

**இரண்டு விடு கதைகள்**

வட்ட வட்டச் சொக்கனர் ;
வாலில்லாத சொக்கனர் ;
எலும்பில்லாத சொக்கனர் ;
என்னை வந்து எழுப்பரூர்.''

வெள்ளைத்துணிபோர்த்திருப்பாள்
சின்னப் பூவம்மாள்.
உள்ளிருந்து எட்டிப் பார்ப்பாள்
சின்னப் பூவம்மாள்.

இவை என்ன ?

களுக்கு ஏற்பாடு செய்திருந்தான். கேளிக்கைகள் முடிந்தவுடன் இளவரசர்கள் சுல்தானுக்கு நன்றி செலுத்தி விட்டு விடை பெற்றுக் கொண்டு விடு செல்ல விரும்பினர். சுல்தான் அவர்களுக்குத் தன் வந்தனத்தைத் தெரிவித்து விட்டு அடிக்கடி அரண்மனைக்கு வந்து போய்க் கொண்டிருக்குமாறு சொன்னன். அவ்வாறே வருவதாகத் தெரிவித்துவிட்டு அவர்கள் "தாங்கள் எங்கள் வீட்டிற்கு விஜயம் செய்தால் எங்கள் தங்கை மிகவும் மகிழ்ச்சி அடைவாள். தயவு செய்து ஒரு நாள் தாங்கள் எங்களுடைய வீட்டிற்கு வந்து எங்களைக் கௌரவிக்க வேண்டும்'' என்று சுல்தானை வேண்டிக் கொண்டனர்.

இளவரசர்கள் தன்னை அழைத்தது கண்டு சுல்தான் பூரித்துப் போனன். அடுத்த நாளே அவர்கள் வீட்டுக்கு வருவதாகவும் தெரிவித்தான். வேட்டையாடும் பொழுது முதன் முதலாகத் தன்னைச் சந்தித்த இடத்திற்கே வந்திருந்து தன்னை அழைத்துச் செல்லும்படி சுல்தான் இளைஞர்களைக் கேட்டுக் கொண்டான்.

இளவரசர்கள் விடு வந்து சேர்ந்தவுடன் தங்கள் தங்கையிடம் அடுத்த நாள் சுல்தான் தங்கள் வீட்டிற்கு விஜயம் செய்யப் போவதை அறிவித்தனர். அந்தச் செய்தியைக் கேட்ட பாரிஜாதம் பேசும் பறவையின் கூட்டை எடுத்து வந்து, சுல்தானை எப்படி வரவேற்க வேண்டும் என்று பறவையைப் பார்த்துக் கேட்டாள்.

அதற்குப் பறவை சொல்லிற்று :

"நல்ல சமையற்காரர்களை அமர்த்தி உயர்தரமான விருந்து தயார் செய்யச் சொல். வெள்ளரிக்காயில் முத்துக்களை அடைத்து கறி செய்யச் சொல்ல மறந்து விடாதே. விருந்து ஆரம்பிக்கையில் சுல்தானுக்கு அதைத்தான் முதலில் பரிமாற வேண்டும்'' என்றது.

அதைக்கேட்ட பாரிஜாதம் ஆச்சரியமடைந்தாள். வெள்ளரிக்காயில் முத்தைச் சேர்த்துக் கறி செய்வது என்பதை அவள் கண்டது மில்லை; கேட்டதுமில்லை. தன்னிடமிருக்கும் முத்துக்களை எல்லாம் உபயோகித்தாலும் கறி செய்யப் போதாதென்று தோன்றிற்று. அதற்கு என்ன செய்வது என்று பேசும் பறவையை கேட்டாள்.

"அம்மணி! நான் சொல்லுகிறபடி செய். எல்லாம் சுபமாகவே முடியும். நாளைக் காலையில் உன் தோட்டத்திற்குச் சென்று உனது வலது கைப்புறத்தில் காணும் மரத்தடியில் தோண்டச் சொல். ஏராளமான முத்துக்கள் கிடைக்கும்'' என்றது பறவை.

**அ**டுத்த நாள் காலை பறவை சொன்னபடியே பாரிஜாதம் ஒரு தோட்டக்காரனுடன் சென்று தனது வலது கைப்புறத்திலுள்ள மரத்தடியில் தோண்டச் சொன்னள். சில நிமிஷங்களுக்குப் பிறகு அங்கே ஒரு தங்கப்பெட்டி அகப்பட்டது. அதைத் தோட்டக்காரன் எடுத்து எஜமானியிடம் கொடுத்தான். பாரிஜாதம் அந்தப் பெட்டியைத் திறந்தவுடன் அதில் நிறைய முத்துக்கள் இருந்ததைக் கண்டாள். குதூகலமாக அதை எடுத்துக் கொண்டு வந்து தன் சகோதரர்களிடம் காட்டினாள். அவர்களும் ஆச்சரியமடைந்து, "முத்துக்கள் எதற்காக?'' என்று கேட்டனர். பேசும் பறவை சொன்ன யோசனையை அவர்களிடம் சொன்னள். அதைக் கேட்ட அவர்களுக்கும் ஆச்சரியம் அதிகரித்தது. இருந்தாலும் பறவை கூறிய வாறே வெள்ளரிக்காய்க்கறி செய்வதை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். பாரிஜாதம் உடனே தனது தலைமைச் சமையற்காரனை வரவழைத்தாள். அவனிடம் முத்துக் குவியலைக் கொடுத்து பேசும் பறவை கூறியபடி வெள்ளரிக்காயில் முத்துக்களைத் திணித்துக் கறி செய்யச் சொன்னள். இதைக் கேட்டு சமையற்காரனும் ஆச்சரியமடைந்தான். என்றாலும் எஜமானி கூறிய

படி, தானே அந்தக் கறியைத் தயார் செய்வதாக ஒப்புக் கொண்டான்.

சுல்தான் கூறியபடி இளவரசர்கள் இருவரும் அவனை வரவேற்று அழைத்துக் கொண்டு வருவதற்காக வேட்டையாடும் இடத்திற்குச் சென்று சுல்தானைச் சந்தித்தனர். அவனுடன் கூடவே சிறிது நேரம் வேட்டையாடி விட்டுப் பின்னர் அவனை அழைத்துக் கொண்டு தங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தனர். அங்கு பாரிஜாதம் சுல்தானை வரவேற்கத் தயாராக இருந்தாள்.

பாரிஜாதத்தின் அழகையும், இனிமையான சுபாவத்தையும் கண்டு சுல்தான் ஆச்சரியமடைந்தான். இளவரசர்களைத் தனியாக அழைத்து அவர்களிடம் ரகசியமாக "இவ்வளவு அழகும் புத்திசாலித்தனமும் வாய்ந்த உங்கள் சகோதரியை விட்டு விட்டு நாங்கள் ஒரு நிமிஷம்கூட பிரிய மாட்டோம் என்று நீங்கள் சொன்னீர்களே அது மிகவும் நியாயமான வார்த்தை!" என்று சொல்லிப் புகழ்ந்தான். பாரிஜாதத்துடன் சில நிமிஷங்கள் பேசி விட்டுச் சுல்தான் அவளைத் தனக்கு அந்த வீட்டையும் அதனுள்ளிருக்கும் பொக்கிஷங்களையும் காட்ட வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அவள் அவ்வாறே அழைத்துச் சென்றாள். சுல்தான் அவளுடைய அழகையும் புத்திசாலித்தனத்தையும் மனதிற்குள் பாராட்டிக் கொண்டே அவள் பின்னால் சுற்றிப் பார்க்கச் சென்றான்.

பாரிஜாதம் வீட்டையும், வீட்டிலுள்ள உயர்ந்த பொருள்களையும் காட்டிய பிறகு சுல்தானைத் தன்னுடைய நந்தவனத்திற்கு அழைத்துச் சென்றாள். (தொடரும்)

# பேசும் கிளி

"ரங்க ரங்க ரங்கா!"

இந்தக் குரலைக் கேட்டதும் வெகு நாட்கள் கழித்து ராமுவின் வீட்டுக்கு வந்த கிருஷ்ணன், "ஏன் அப்பா, ராமு! நீ கிளி வளர்க்கிறாயா, என்ன?" என்று கேட்டான்.

"ஆமாம்! உனக்குத் தெரியாதா? நான் இந்தக் கிளியை வளர்க்க ஆரம்பித்து ஒரு மாதத்துக்கு மேலாகிறதே!"

"வா, போய்ப் பார்ப்போம்! எனக்குக் கிளி என்றால் ரொம்பப் பிடிக்கும்!" என்று சொல்லிக் கிருஷ்ணன் ராமுவை அழைத்துக் கொண்டு கிளிக் கூண்டின் அருகில் சென்றான்.

கிருஷ்ணன் கிளியைப் பார்த்துவிட்டு, "ஆகா! எவ்வளவு அழகான கிளி! ஆமாம்! இதற்குப் பேசக் கற்றுக் கொடுத்திருக்கிறாயோ?—ஏன் ராமு! இது என்ன இது! இதன் இரண்டு கால்களிலும் இப்படிக்கயிறுகட்டியிருக்கிறாயே, எதற்காக?" என்று கேட்டான்.

"ஒரு கால் கயிற்றைப் பிடித்து இழுத்துப் பார்! எதற்காக என்று தானே தெரிகிறது!" என்று சொன்னான் ராமு.

கிருஷ்ணன் அவன் சொன்னது போல் கிளியின் ஒரு காலின் கயிற்றைப் பிடித்து இழுத்தான். உடனே கிளி, "சீதாராம்!" என்று சொல்லிற்று. அதைப் பார்த்த கிருஷ்ணன், "நன்றாகப் பழக்கி வைத்திருக்கிறாயே! ஆமாம்! இன்னொரு கால் கயிற்றையும் பிடித்து இழுத்தால் என்ன சொல்லும்?" என்று கேட்டான்.

அதற்கு ராமு, "என்னிடம் கேட்பானேன்! நீயே இழுத்துப் பாரேன்!" என்று சொன்னான்.

கிருஷ்ணன் அவன் சொன்னது போலவே செய்தான். உடனே கிளி, "ராதே சியாம்!" என்றது.

அதைக் கண்ட கிருஷ்ணனுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அடுத்த கணமே இரண்டு கால் கயிற்றையும் சேர்ந்தாற்போல் இழுத்தால் என்ன சொல்லும் என்று அறிய ஆவலாயிருந்தது. ஆகவே, ராமனைக்கேட்காமலே, அதன் இரண்டு கால் கயிறுகளையும் சேர்ந்தாற் போல் பிடித்து இழுத்தான்.



அதைக் கண்ட கிளி கழுத்தைச் சாய்த்துக் கொண்டு, "முட்டாள்! இரண்டு கால்களையும் சேர்த்து இழுக்காதே! கீழேவிழுந்துவிடுவேன்!" என்றது.

— அஷயம்

மணியம்

# பாதுஷாவின் காதல்

ஆசிரியர்-சிதர்சன் மொழிபெயர்ப்பு-ரா.கி

## 6. கோட்டை தகர்ந்தது!



யூனஸுக்கு, தான் செய்த காரியம் எத்தகையது என்பது தெரியவே தெரியாது. அவன் சுவரையொட்டினாற் போல மறைந்து நின்று கொண்டு ரேம்பஸின் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். இடையிடையே அவனுக்கு அடக்க மாட்டாத சிரிப்பு வந்தது. அவன் தனக்கு வந்த சிரிப்பை அடக்க எவ்வளவோ முயன்றான். இரு கைகளாலும் வாயை இறுகப் பொத்திக் கொண்டுகூடப் பார்த்தான். என்ன செய்தாலும் சிரிப்பு 'குபீர், குபீர்' என்று பொத்துக் கொண்டு வரத்தான் செய்தது. நஞ்சுள்ள நாகத்துடன் வேடிக்கையென்று எண்ணி விளையாடிக் கொண்டிருக்கும் அறியாப் பாலகனுக்கு, தான் செய்யும் காரியம் எவ்வளவு ஆபத்தானது என்று தெரியுமா? தெரிந்தால் அவன் அப்படி நஞ்சுள்ள நாகத்துடன் துணிந்து விளையாடுவானா? அதே போல மரண தேவதையின் மடியில் உட்கார்ந்திருந்த பொழுதிலும் இயூனஸ் சிறிதும் பயமின்றி அநாயாசமாகச் சிரித்து ஆனந்த பரவசமுற்றுக் கொண்டிருந்தான்.

அடுத்த சில கண நேரத்துக்கெல்லாம் ரேம்பஸ் அவன் அருகில் வந்து விட்டான். வரும்பொழுதே அவன் வாயில் ஆள் காட்டி விரலை வைத்துப் பேசாமலிருக்கும்படி இயூனஸுக்குச் சமிக்ஞை செய்தான். அப்பொழுது அவன் முகம் போயிருந்த போக்கைச் சொல்லி முடியாது. பேயறைந்தவன் போலப் பயந்து பயந்து தள்ளாடித் தள்ளாடிக் காலடி எடுத்து வைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய உடல் பறந்தது; உள்ளம் பறந்தது; ஆவி பறந்தது. அதிகம் சொல்லுவானேன்? உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரை ஒரே ஆட்டமாக ஆடியது. ரேம்பஸினுடைய அந்த அவல நிலையைக் கண்ட இயூனஸ் கதி கலங்கிப் போய் விட்டான். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில், தான் ஏதோ மாபெரும் தவறு செய்து விட்டதையும் உணர்ந்தான். 'என்ன ஆகுமோ?' என்று எண்ணிய மாத்திரத்திலேயே அவனுக்கு உள்ளும் புறமும் உதறல் எடுத்து விட்டது.

ஆனால் ரேம்பஸ் அவனுக்கு விஷயத்தை விளக்கிச் சொல்வதற்கோ, அவன் அதைப் புரிந்து கொள்வதற்கோ முயற்சிப்பதற்கு முன்பாகவே, ஒரு கையில் தீவட்டியும் இன்னொரு கையில் ஊதலும் ஏந்தியவாறு அவ்வழியே ஒரு காவலாளி வந்து விட்

டான். அவ்விருவரையும் கண்டதுதான் தாமதம்; அவன் முன்பின் யோசியாமல் தன் கையிலிருந்த ஊதலை எடுத்து வாயில் வைத்து ஊதியும் விட்டான். அந்த ஊதல் சத்தத்தைக் கேட்ட மறுகணமே ஒன்றன் பின் ஒன்றாக ஐந்நூறுக்கு மேற்பட்ட ஊதல்கள் ஒலித்தன. யாரோ அந்நியன் ஒருவன் அநுமதியின்றிப் பொக்கிஷ மாளிகைக்குள்ளே நுழைந்து விட்டான் என்னும் செய்தி காட்டுத் தீ போலக் காவலாளிகளிடையே பரவி விட்டது.

ரேம்பஸ் நியூனஸின் கையைப் பிடித்துக் 'கர கர' வென்று இழுத்துக் கொண்டு ஓட்டமாக ஓடினான். கொஞ்ச தூரம் ஓடினதும் ஒரு மரத்தடியில் ஒளிந்து கொண்டான். ஐந்நூறுக்கு மேற்பட்ட ஊதல்கள் அல்லவா அந்தச் செய்தியை ஒலி பரப்பியிருந்தன? ஆகவே ஐந்நூறுக்கு மேற்பட்ட காவலாளிகள் கையில் கொழுந்து விட்டெரியும் தீவட்டிகள் ஏந்தி அவனை மூலை முடுக்கு, இண்டு இடுக்கு எல்லா இடங்களிலும் சல்லடை போட்டுச் சலித்துத் தேடத் தொடங்கி விட்டனர். ரேம்பஸோ கெட்டியாகத் நியூனஸின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு இருட்டைத் தேடி அலைந்து கொண்டிருந்தான். பால் போலக் காய்ந்து கொண்டிருந்தது வெண்ணிலவு! போதாக் குறைக்குத் 'தக தக' வென்று சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த ஐந்நூறுக்கு மேற்பட்ட தீவட்டிகள் வேறு! அப்படியிருக்கும் பொழுது இருட்டு எவ்வளவு தேடினாலும் எங்காவது கிடைக்குமா? அந்த வேளையில் எங்கேயாவது கன்னங்கரிய திட்டுப் போன்ற இருட்டுக் கிடைத்திருந்தால் ரேம்பஸுக்கு அதுவே தன்னுடைய வாழ்க்கையின் பேரொளியாகத் தோன்றியிருந்திருக்கும்! ஆனால் அங்கே பெயரளவுக்குக் கூட இருட்டைக் காணோமே, என்ன செய்வது? எங்கு ஓடி ஒளிந்துதான் என்ன பயன்? ஆயுதம் தாங்கிய ஆயிரம் அடிமைகளில் எவனாவது ஒருவன் கண்ணில் அவன் பட்டுத்தானே தீரவேண்டும்? கடைசியில் பருனின் அடிமைகள் அவ்விருவரையும் பார்த்தே விட்டார்கள்! அது மட்டுமல்ல; அடுத்த கணமே அவ்விருவரையும் கைதுசெய்து விட்டார்கள்! ரேம்பஸ் தலையில் அடித்துக் கொண்டான். பித்தனைப் போலத் தலை மயிரைப்பிடித்து இழுத்துப் பிய்த்துக் கொண்டான். அதைத் தவிர அவன் வேறு என்னதான் செய்வான், பாவம்!



பருன் தன் அரண்மனையின் உப்பரிகை மீது ஏறி நின்று அக்காட்சிகள் அனைத்தையும் கண்ணுற்றான். அவனுக்குக் கோபம் எல்லை மீறியது. கண்கள் கோவைப் பழம் போலச் சிவந்தன. உதடுகள் துடித்தன. கைகள் நடுங்கின; கால்கள் ஆடின. அவன் பார்த்த பார்வை குற்றவாளிகளை அப்படியே கடித்து விழுங்கி விடுவான்போ லிருந்தது.

அடுத்த சில நிமிஷ நேரத்துக் கெல்லாம் பொக்கிஷ மாளிகையின் குற்றவாளிகள் பருனெதிரே ஆஜர் செய்யப்பட்

டனர். அந்தக் குற்றவாளிகளில் ஒருவன் ரேம்பஸ் என்பதை அறிந்ததும் பருனு டைய கோபம் இன்னும் பன்மடங்கு அதி கரித்து விட்டது. அவன் ரௌத்ராகார மாகக் கொதித்து எழுந்து, "பொக்கிஷ மந்திரி நல்லத்தின் பிள்ளையா இந்தக் குற்றம் செய்யத் துணிந்தது? ஆச்சரியமா யிருக்கிறதே! நாம் பறை சாற்றச் சொன்ன விஷயத்தை நீ கேட்க வில்லை என்பதை உன்னால் நிரூபிக்க முடியுமா?" என்று கேட்டான்.

ரேம்பஸ் வெகு அலட்சியமாக, "நான் பொய் என்ற சொல்லையே அறியாதவன் என்பது எகிப்து நாட்டு மன்னருக்கு நன்கு தெரியும். நான் என் தலையே போவதாயிருந்தாலும் பொய் சொல்ல மாட்டேன். இது சத்திய . ஆகவே நான் என் குற்றத்தை ஒப்புக் கொள்ளு கிறேன். நான் சாவதற்குச் சிறிதும் அஞ்சவில்லை. எகிப்து நாட்டு மன் னரிடம் நான் ஒரே ஒரு சிறிய விக்ஞா பனம் செய்து கொள்ள விரும்புகிறேன். சாகப்போகிறவனின் கடைசி வேண்டு கோள் என்ற முறையில் அதற்கு மன்னர் கட்டாயம் செவி சாய்ப்பார் என்றும் பரிபூரணமாக நம்புகிறேன். என் நம் பிக்கை வீண் போகாதல்லவா?" என்று கேட்டான்.

பருன் தன் செக்கச்சிவந்த தீப் பொறி கக்கும் கண்களை ரேம்பஸின் மீது புதைத்து, "நீ என்ன சொல்ல விரும்பு கிறாய்? சொல்லு, நாம் அவசியம் கேட்கத் தயாரா யிருக்கிறோம்!" என்றான்.

"நான் எகிப்து நாட்டு மண்ணில் உதித் தவன். ஆகவே நான் என்னை எகிப்து நாட்டின் மகன் என்று சொல்லிக் கொள் ளுவதில் அளவற்ற பெருமை கொள்ளு கிறேன். நான் பாதுஷா பறை சாற்றச் சொல்லியிருந்த விஷயத்தை என்னுடைய இந்தக் காதுகளாலேயே கேட்டேன். இந்தப் பொக்கிஷ மாளிகைக்குள்ளே அடி எடுத்து வைப்பவன் மரண தண்ட னைக்கு உள்ளாவான் என்பதையும் நான் நன்கு அறிவேன். ஆகவே நான் எப் பேர்ப்பட்ட சித்திரவதைக்கும் கடும் தண்டனைக்கும் கஷ்ட நிஷ்டூரங்களுக்கும் ஆளாகத் தயாரா யிருக்கிறேன். ஆனால் இதோ இருக்கும் இந்தப் பெண் எவ்விதக் குற்றமும் அற்றவள். இவள்மீது எள்ள ளவும் குற்றமில்லை. ஆகவே......" என்று ஆரம்பித்தான் ரேம்பஸ்.

ஆனால் பருன் அதற்குள்ளாக இடை மறித்து, "தீர்ப்பு அளிக்கும் வேலை என்னுடையது. உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? வாயை மூடு!" என்று அதட்டிக் கடிந்து கொண்டான்.

"ஆனால், பாதுஷா சலாமத்! இந்தப் பெண் எகிப்து நாட்டு வாசியில்லை. இவள் தாங்கள் பறை சாற்றச் சொன்ன விஷ யத்தைக் கேட்கவில்லை. தெரிந்து வேண்டு மென்றே அரச ஆக்ஞையை மீறிப் பொக் கிஷ மாளிகைக்குள் நுழையவும் இல்லை" என்றான் ரேம்பஸ்.

"அப்படியானால் இவள் யார்?" என்று ரேம்பஸைப் பார்த்துக் கேட்டான் பருன்.

"இவள் ஒரு அடிமை ஜாதிப் பெண். எகிப்து நாட்டு மக்கள் இந்த ஜாதியின ரிடம் கல் அறுக்கும் வேலை வாங்கு கிறார்கள்," என்று பதில் அளித்தான் ரேம்பஸ்.

பருன் சிறிது நேரம் யோசித்தான். ரேம்பஸ் காட்டிய அந்த அலட்சிய மனோ பாவம், அவனுக்குத் தன் ஆட்சியையும் ஆட்சியின் பிரதாபத்தையும் அவமதிப் பது போலப்பட்டது. ஆகவே பழைய மிடுக்குடன், முகத்தில் கோபக்குறி தாண்டவமாட, "நம் தீர்ப்பு என்ன வென்றால், ரேம்பஸை எகிப்து நாட்டின் மிக மிகப் பெரிய பாராங்கல்லுக்கு அடி யிலே அமுத்தி நசுக்கிக் கொன்றுவிட வேண்டும். அதன் பிறகு அவனுடைய பிணத்தை மீன்களுக்கு ஆகாரமாக நீல நதியில் விட்டெறிந்துவிட வேண்டும். அப் புறம் இந்த அடிமை ஜாதிப் பெண்ணை..." என்று சொல்ல வாய் எடுத்தான்.

அதற்கு மேல் நியூனஸினால் பேசாமல் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவள் மின்னல் வேகத்தில் முன்னேறிப் பருனின் பாதங்களில் விழுந்தாள். பருன் தன் காலடிகளில் யார் விழுந்திருக் கிறார்கள், எப்படி விழுந்திருக்கிறார்கள் என்பதையெல்லாம் சிறிதும் பொருட் படுத்தவில்லை. அவன் நியூனஸை ஏறெ டுத்தும் பார்க்கவில்லை. அவன் அரச கம்பீரத்துடன் நிமிர்ந்த தலையைச் சற்றும் தழைக்காமல், தன் ஆட்களைப் பார்த்து, "இவளை நம் காலடிகளிலிருந்து இப் பொழுதே அப்புறப் படுத்துங்கள். இவள் நம் காலடிகளில் கிடப்பதற்குச் சற்றும் அருகதை யற்றவள்; தகுதியற்றவள்!" என்று உத்தரவிட்டான்.

நியூனஸ் எழுந்து நின்றாள். அவள் தன் ஸ்திரீ ஸௌந்தர்யம், யௌவன லாவண்யம்—இவற்றின் பக்க பலத்தைக் கொண்டு பருனின் இதயக் கோட்டை யைத் தாக்கினாள். அவளுடைய அந்த மின்னல் தாக்குதலைச் சகிக்க முடியாமல் பருனின் இதயக் கோட்டை சற்று ஆட் டம் கொடுத்தது. ஆகவே, பருன் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். அவனுக்கு அந்த ஒரே பார்வையில் எண் ணற்ற எழில் உலகங்கள் ஒன்று திரண்டு

சடு இணையற்ற எழில் உருவமாக உரு வாகி யிருப்பதுபோலத் தோற்றியது. அவன் எத்தனையோ லட்சக்கணக்கான பெண்களைப் பார்த்திருக்கிறான். எத்த னையோ ஆயிரம் ஆயிரம் அழகிகளின் ரூப லாவண்யத்துடன் விளையாடி யிருக்கிறான்; இன்பக் கேளிக்கைகள் புரிந்திருக்கிறான். ஆனாலும் அன்று அவனுடைய மனம், மூளை, கண்கள் இவற்றுக் கேற்பட்ட நிலைமை வேறு என்றைக்குமே ஏற்பட்ட தில்லை. அன்றுதான் அவனுக்குத் தன் பலம் அனைத்தும் சிதறுவது போலவும் தன் அரசாங்கம் குறுகிக் கடுகாக ஆவது போலவும் தோன்றியது. அவன் விழிகள் தியூனஸின் முகத்திலும் கால்கள் பூமி யிலும் புதைந்தன. அவன் ஆசை தவழும் விழிகளுடன் அப்படியே அள்ளிப் பருக விரும்புகிறவனைப் போல, தியூனஸைப் பார்க்கலானான். அதே சமயம் மேலே நீல வானத்திலிருந்து முன்பின் அறிமுகம் இல்லாத ஒரு குருட்டுப் பையன் கையில் மலர் வில்லும் மலர் அம்பும் ஏந்தி ஒரு வேட்டையின்மீது தன் மலர் அம்பைத் தொடுத்துக் கொண்டிருந்தான்!

தியூனஸ் தன் ஸௌந்தர்ய பலத்தைக் கொண்டு பருனைத் தன் வசப்படுத்தி விட்டாள். ஆனால் தன்னிடம் பருன் தன் மனதைப் பறி கொடுத்து விட்டான் என்ற விஷயம் அவளுக்குத் தெரியவே தெரியாது. தன் அழகுக்கு இவ்வளவு மன மோகன மந்திரசக்தி இருக்கிறது என்ற விஷயம்கூடப் பாவம், அந்தப் பேதைப் பெண்ணுக்குத் தெரிந்திருந்தால் தானே? 'நாம் குற்றமற்றவள். ஏதும் அறியாத நிரபராதி' என்பதைப் பருன் ஊகித்து உணர்ந்து கொண்டு விட்டான். அதனால்தான் இந்தப் பெண் இந்தச் சங்க டத்தில் எப்படி வந்து மாட்டிக் கொண் டாள் என்று பிரமித்துப் போய்த் தன் னைப் பார்த்தவாறு சிந்தித்துக் கொண் டிருக்கிறான் என்று அவள் எண்ணி னாள். ஆகவே, அவள் மறுபடியும் பரு னின் காலடிகளில் விழுந்து வணங்கினாள். தன் குற்றம் மன்னிக்கப்படும் என்ற நம் பிக்கை ஏற்பட்டால் யார்தான் எவ்வளவு தடவைதான் காலில் விழமாட்டார்கள்? தியூனஸ் பருனின் கால்களைக் கெட்டியா கப் பிடித்துக் கொண்டு, தேனினும் இனிய தன் குரலில், "இடிக்கும் மின்ன லுக்கும் அதிதேவதையான ஹே தெய் வமே! இந்த எகிப்து நாட்டு இளைஞன் எவ் விதக் குற்றமும் அற்றவன். குற்றம் எல் லாம் என்னுடையதுதான். இவன் என் னைக் காப்பாற்றுவதற்காகவும், எனக்கு உன்னுடைய உத்தரவைத் தெரிவிப்பதற் காகவும் என் பின்னால் ஓடோடி வந்தான். ஆகவே, குற்றம் இவனுடையதல்ல; என் னுடையதுதான். தண்டனை இவனுக்கு அளிக்கப்படக் கூடாது. எனக்குத்தான் அளிக்கப்பட வேண்டும். உன் உத்தரவை மீறிக் குற்றம் செய்தவள் நான். எனக்குத் தான் தண்டனை கிடைக்க வேண்டுமே யொழிய இவனுக்கு அல்ல. நான்தான் குற்றவாளி! குற்றத்துக்குள்ள தண் டனையை எனக்குக் கொடு" என்றாள்.

அவள் சொன்னதைக் கேட்ட ரேம்பஸ் குறுக்கிட்டு, "இல்லை, இல்லை! அவள் பொய் சொல்லுகிறாள்" என்றான்.

"இல்லை, பாதுஷா சலாமத்! நான் பொய் சொல்லவில்லை. நான் சொல்லுவது முற்றிலும் உண்மை. இவள் என்னைத் தப்புவிக்க விரும்புகிறாள். ஆகவே, சற்றும் கூசாமல் பொய் பேசுகிறாள். நான் ஏழை தான்; ஏதும் அறியாத பேதைதான். இருந்தாலும் எனக்கு உயிர் மீது அவ்வளவு பற்றுதல் இல்லை. எனக்காக இன்னொரு வள் மரண தண்டனை பெறுவது, அதைப் பார்த்துக் கொண்டு நான் சும்மா உட்கார்ந் திருப்பது—இது எனக்குச் சிறிதும் சம்மத மில்லை. அப்படி நான் மானம் கெட்டு உயிர் வாழவும் விரும்பவில்லை. குற்றம் செய்தவனுக்குத்தான் தண்டனை அளிக்கப் பட வேண்டும். குற்றவாளியை நீக்கிக் குற்றமற்றவளுக்குத் தண்டனை யளிப்பது சரியல்ல; தர்மம் அல்ல; நியாயம் அல்ல. பாதுஷா! நான்தான் குற்றவாளி. என் னுடைய குற்றத்துக்கு எனக்கேதான் தண்டனை அளிக்கப்பட வேண்டும்" என்று மன்றாடி வேண்டினான் தியூனஸ்.

தனக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனை யைக் கேட்டுச் சிறிதும் கலங்காத ரேம் பஸ், தியூனஸின் வார்த்தைகளைக் கேட்டு நடுநடுங்கிப் போய்விட்டான். அவனுக்குத் தன் உயிரே உலர்ந்து விட்டது போலத் தோன்றியது. அவனுடைய நெற்றியில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் துளிர்த்து நின்றன. அன்பு நிறைந்த அவ னுடைய உள்ளம், 'என் சொல்லைத்தான் பருன் உண்மையென்று மதிக்க வேண்டும். குற்றத்துக்கு அளிக்க விருக்கும் தண் டனையை எனக்கேதான் அளிக்க வேண் டும்' என்று கடவுளை அடிக்கடி வேண்டிக் கொண்டது.

பருன் தியூனஸின் பூவுடலைப் பேராசை தவழும் கண்களால், அப்படியே விழுங்கி விடுபவன் போலப் பார்த்தான். அவனுக்கு அவளுடைய பூவுடலைப் பார்க்க வேண்டும், பார்த்துக் கொண்டே யிருக்க வேண்டும் என்று தோன்றியது. இருந்தாலும் அவன் பருன் ஆயிற்றே! ஆகவே, அவன் தன் ஆட்களைப் பார்த்து, "இப்பொழுது இவர் கள் இருவரையும் சிறைச்சாலைக்கு இட்டுச் செல்லுங்கள். நாம் பின்னால் தீர்ப்பு கூறு வோம்!" என்றான். (தொடரும்)

# ஆரோக்கிய ரகசியம்



யோகாசன நிபுணர்

ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி

'ஆரோக்கியமே அருந்தனம்' என்பது ஆன்றோர் வாக்கு. அந்தத் தனம் தான் மற்றெல்லாச் செல்வங்களைக் காட்டிலும் சிறந்தது. கல்விச் செல்வம், பொருட்செல்வம், மக்கட் செல்வம், அருட் செல்வம் இன்னும் என்னென்ன செல்வங்கள் உண்டோ, அவைகளையெல்லாம் அடைய, அனுபவிக்க, ஆரோக்கியச் செல்வம் அவசியமானது.

கல்விச் செல்வமுடையோருக்கு, உடல் நலம் குன்றினால், அவர்களுடைய கல்வியும், அறிவும் மற்றவர்களுக்கும் பயன் தராது; அவர்களும் பயன் பெற முடியாது. நீதிபதிகள், வக்கீல்கள், எழுத்தாளர்கள், தலைவர்கள் இவர்கள் எல்லோரும் செய்யும் சேவைதான் ஒரு தேசத்தின் சிறந்த செல்வம். இவர்களுடைய சேவை நாட்டுக்கு உயிர்நாடி போன்றது. அப்பேர்ப்பட்டவர்கள் நோய் கொண்டால் நாட்டுக்கு எவ்வளவு நஷ்டம்? பெரியார்கள் என்றும் தலைவர்கள் என்றும் நோயானது பாரபட்சம் பார்க்கிறதா?

பொதுவாகப் பணக்காரர்களுக்கும், வியாபாரிகளுக்கும்தான் மிகப் பெரிய வியாதிகள் வருகின்றன. 'பணம் பத்தும் செய்யும்' என்பார்கள். அப்படியென்றால் பணக்காரர்களெல்லோரும் ஆரோக்கியமாகவல்லவோ இருக்க வேண்டும்? பணம் பெருகுவது போல் டாக்டர் பில்லும் பெருகுகிறது. ஏழைகள் வயிறார உண்ண உணவில்லையே என்று ஏங்கும் நேரத்தில், பணக்காரர்கள் சாப்பிடப் பசியில்லையே என்று பசி யெடுக்க மாத்திரையும், ஜீரணமாக மாத்திரையும், ஜீரணமானதை வெளியாக்க மாத்திரையும், பிறகு தூங்குவதற்கு மாத்திரையும் சாப்பிட்டுக் கொண்டு தங்கள் காலத்தைத் தள்ளி வருகிறார்கள்.

யாராவது 'பணம் எவ்வளவு இருக்கிறது?' என்று கேட்கிறார்கள்? 'குழந்தைகள் எத்தனை?' என்றுதானே கேட்கிறார்கள். ஆகையால் நமக்குக் குழந்தைகள்தான் செல்வம். எப்பேர்ப்பட்ட குழந்தைகள் என்றால் துள்ளும் கானைகளைப் போல் பயமே அறியாத சுறுசுறுப்பும் ஆரோக்கியமும் உள்ள குழந்தைகள். அவர்கள் நாட்டுக்கும் பொக்கிஷம். பிறக்கும்போதே மூன்று அல்லது நான்கு ராத்தல் எடையுடனும், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர வேண்டியதற்குப் பதில், நாளொரு மேனியும் பொழுதொரு கண்டமுமாக, சதா அழுது மடிந்து கொண்டு மண்ணுப் பிள்ளையார் போல, இரண்டு வயதானாலும் நடக்க முடியாமல் நோஞ்சையாக இருக்கின்றன. இப்படி இருக்கும் குழந்தைகளா செல்வங்கள்? நோய்க்களஞ்சியமல்லவா? 'புத்' என்ற நரகம் இருக்கிறதோ என்னவோ! புத்திர சந்தானமில்லாதவர்களுக்குப் 'புத்' எனும் நரகம் கிடைக்கும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் நோயுள்ள குழந்தைகளுடன் வாழ்க்கை நடத்துவதை விடப் 'புத்' எனும் நரகம் அதிகக் கொடுமையுடையதாக இருக்காது. வாழ்க்கையில் சாந்தியும் ஆனந்தமும் இல்லாத இடம் நரகம்தான்.

அருட் செல்வம் மற்றெல்லாச் செல்வங்களை விடச் சிறந்த செல்வம்தான். அந்தச் செல்வத்தை அடையவும், சாதனைகள் செய்யவும், ஜபம் செய்யவும், தியானம் செய்யவும், உடல் ஆரோக்கியமில்லாவிடில் எப்படி சாத்தியம்? "ஐயோ! அப்பா!" நோகிறதே. "ராம, ராமா! அப்பாடியோ!" கொல்லுகிறதே. "ஈசா! அந்த மருந்துப் புட்டியை எடுத்துக் கொண்டு வாயேன். சிவா, சிவா!" என்றால் தியானமாய் விடுமா? அருட் செல்வம் கிடைத்து விடுமா? அதனால் தான் முதிர்ந்த ஞானியும் அருட்சோதி வள்ளலுமாகிய ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளும் "நோயற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்" என்று அன்புருகப் பாடினார்.

ஆகவே, ஆரோக்கிய அஸ்திவாரம் பலமாய்ப் போட்டுக் கொண்டால்தான் பல துறைகளில் இறங்கலாம். வாழ்க்கையில் ஏற்படும் பொய், வஞ்சனை, சூது, நோய் பலவிலும் என்னும் சூறாவளிகளைத் தாங்கி, நம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டு முன்னேறலாம்.

மனது நோய் கொள்வது என்பது உண்மையல்ல. சரீரம் நோய் கொள்ள, மனதும் நோய் கொள்ளுகிறது. நோயாளி எப்பொழுதும், பிறரைக் குறை கூறியும், சிடுசிடுத்தும், கோபப்பட்டுக் கொண்டும் இருப்பான். பெரிய அறிவாளிக ளிடத்தி லும் சில சமயம் இக் குணங்கள் தோன்றி மறைவதுண்டு. நன்ருய் ஆராய்ந்தால் ஏதாவது ஒரு சிறு கோளாறு அவர்கள் உடலில் இருக்கும். ஆரோக்யமும், தேஜஸும் ஆத்ம பலமும் பொருந்தியவர்கள், பிறரைக் குறை கூற மாட்டார்கள்.




பொய் சொன்னால் பாவம், திருடினால் பாவம், கொலை செய்தால் பாவம் என்றெல்லாம் சொல்லுகிறோம். ஆனால் நோயாளியாய் இருப்பதைப் போலப் பாவமான காரியம் ஒன்றுமில்லை. நோயாளியால் யாருக்கு என்ன லாபம்? பிறருடைய கஷ்டத்தால் நோயுடலைச் சுமந்து பூமிக்குப் பாரமாய் வாழ வேண்டியது தான். இது பாவமல்லவா? தொற்று நோய் உள்ளவனாக இருந்தாலோ சொல்லவே வேண்டாம். தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தன்நோயைப் பரிமாறி விடுகிறான். நோய் உள்ளவனிடம் உயர்ந்த எண்ணங்களும், நல்ல நோக்கங்களும் தோன்ற மாட்டா. ஆரோக்கியம் பொருந்தியவரிடம் தான் உயர்ந்த நோக்கங்களும் நல்ல எண்ணங்களும் தோன்றும். அந்த நோக்கங்களை நிறைவேற்றும் ஆற்றலும் உண்டாகும்.

இன்றுள்ள நம்முடைய வாழ்க்கை நிலைமையில், நாம் மற்றெல்லா விரோதிகளுடனும் போராடுவதைப் போல, வியாதி எனும் பகைவனுடனும் போராட வேண்டியிருக்கிறது. நமது சுற்றுப்புறம், சூழ்நிலை, நாம் வசிக்கும் இடம், நாம் பழகும் நண்பர்கள், பழக்கம், ஆகார ஒழுங்கீனம் முதலியவைகளாலேயே நமக்குப் பல வியாதிகள் வருகின்றன. இதிலிருந்து விடுதலையே பெற முடியாதா? முடியும். (தொடரும்)



● ● "வாயுள்ள பிள்ளை பிழைக்கும்" என்று சொல்வதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். "அது எப்படிப் பிழைக்கும்?" என்று கேட்பவர்களுக்கு இதோ, மிஸ்டர் அப்பு பதில் சொல்லுகிறார்: ● ●




மிஸ்டர் அப்புவைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. ஆனால் மிஸ்டர் அப்புவுக்குத் தன்னைப்பற்றி உலகத்தில் எவருக்கும் தெரியாமல் இருக்காது என்றுதான் அபிப்பிராயம்.

'வாய் உள்ள பிள்ளை பிழைக்கும்' என்று ஒரு வசனம் உண்டு. கடவுள் ஒவ்வொருவரையும் வாயோடுதான் படைத்திருக்கிறார். ஆனால் எவ்வளவு பேர் உலகத்தில் ஊமைகளாய்த் திரிகிறார்கள்! எவ்வளவு பேர் உலகத்தில் பிழைக்கத் தெரியாமல் திண்டாடுகிறார்கள்! இதிலிருந்து ஒரு மனிதனுக்கு வாய் மாத்திரம் இருந்தால் பிழைத்துவிட முடியாது என்ற உண்மை விளங்குகிறதல்லவா! பேச வேண்டும்; குழைந்து ஒரு இடத்தில் பேச வேண்டும். எதிர்த்துப் பேச வேண்டிய இடத்தில் எதிர்த்துப் பேச வேண்டும். அணைத்துப் பேச வேண்டிய இடத்தில் அணைத்துப் பேச வேண்டும். நயம், பயம், வீரம், சாகஸம், நாஸ்யம், அபிநயம் ஆகிய ரஸாநுபவங்களில் தேர்ச்சி யடைந்து பேச வேண்டிய இடத்தில் துணிச்சலாக உண்மையே பேசிவிட வேண்டும். இந்தப் பேச்சு வார்த்தையில் கரைகண்ட நிபுணன் மிஸ்டர் அப்பு. ஆகையால் அவனுக்குப் பிழைக்கும் வழியை யாரேனும் கற்றுக் கொடுக்கவா வேண்டும்!

மிஸ்டர் அப்பு எங்கள் ஊருக்குக் குடியேறி வருஷம் இரண்டாகப் போகிறது. ஊரில் பிரதானமான தெருவில் பெரிய வீடு ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறான். இந்த இரண்டு வருஷ காலத்தில் அந்த வீட்டின் சொந்தக்காரருக்கு வாடகை என்று ஒரு தம்பிடி கூடக் கொடுக்காமல் சொந்த வீடுபோல் ஒரு பெரிய மாடி வீட்டில் ஒருவன் வசிக்கிறான் என்றால் ஆச்சரியமாய்த்தா னிருக்கும். இதற்குக் காரணம் அவனுடைய வாய்ப் பேச்சுத்தான்.

பரத சக்கரவர்த்தி ஆண்ட காலத்திலிருந்து அந்த ஊரிலேயே பெரிய குடும்பங்களில் வம்ச பரம்பரையாகப் பிறந்து வளர்ந்து, அந்தஸ்திலும் அதிகாரத்திலும் முன்னவர்களைக் கூட நம்பி ஒரு பைசா கடன் கொடுக்காத மகானுபாவர்களிடத்திலெல்லாம் மிஸ்டர் அப்பு சாதாரண வாய்ப்

அவனுடைய தங்கை மீனாவுக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்பது தான்.

மிஸ்டர் அப்பு இப்பொழுது ஊரில் ஒரு புதிய சிநேகிதரைப் பிடித்திருக்கிறான், புளியங்கொம்பைப் பிடித்திருப்பது போல. அந்த நண்பர் யார் தெரியுமா! பொதுநல ஊழியர் தோழர் சங்கரன். அப்புவின் நான்கு வருஷ திட்டத்துக்குச் சங்கரனால் கணிசமான உதவி ஏற்படா விட்டாலும் அன்றன்று கைச் செலவுக்கும் குடும்பச் செலவுக்கும் வழி ஏற்படும் என்று நம்பலாம். இதனால் சங்கரின் சிநேகிதம் அப்புவுக்கு இன்றியமையாததாகி விட்டது.




பொதுநல சேவகன் சங்கர் பெரிய பணக்கார வீட்டுச் செல்வப் புதல்வன். கலாசாலையில் பி.ஏ. பட்டம்பெற மூன்று வருஷம் முயற்சி செய்தும் பலிக்காமல் போனதால் பொதுநல சேவை செய்யத்தான் பிறந்திருக்கிறோம் என்ற உண்மையை உணர்ந்து கலாசாலையை விட்டு வெளியேறியவன். ஏழைகள் படும் பாட்டை உள்ளபடி உணரும் ஞான ஒளி அப்பொழுதுதான் அவன் கண்களுக்கு ஏற்பட்டது. சமூகத்தின் மூடப் பழக்க வழக்கங்களையும் ஊழல்களையும் சுட்டுப் பொசுக்க நெருப்புப் பெட்டியை எப்பொழுதும் சட்டைப் பையில் சங்கரன் தயாராய் வைத்திருப்பான். (சிலர் அவன் அடிக்கடி சிகரெட் குடிப்பதால் எப்பொழுதும் அவனிடம் நெருப்புப் பெட்டி இருக்கிறது என்றும் சொல்லுவார்கள்) ஆவேசமாக மேடைமீது ஏறிப் பேசுவதில் தீரன்—கடல் மடை திறந்தாற் போலவும், காளமேகம் கர்ஜிப்பது போலவும் இருக்கும் அவன் பேச்சு. அவன் எந்தக் கட்சியைச் சேர்ந்தவன், அவன் கொள்கைகள் என்ன என்று மாத்திரம் ஒருவருக்கும் தெரியாது. எந்தக் கட்சிக்கோ எந்தக் கொள்கைகளுக்கோ கட்டுப்பட்டால் பேச்சு உரிமை, மனித உரிமை எல்லாம் கட்டுப்படுத்தப்பட்டு விடும் என்பது அவன் அபிப்பிராயம். மனம் போனபடி பேச முடியாமல் போய்விடும் அல்லவா!

மிஸ்டர் அப்பு சங்கரனின் சிநேகிதன் ஆனது ஒரு விதத்தில் அதிர்ஷ்டம்தான். தினசரி செலவுக்கு அவனால் உதவி கிடைப்பதும் தவிர அப்புவின் நான்கு வருஷ திட்டத்திற்கு அவன் ஒரு பிரசாரக் கருவியாகப் பயன் பட்டான். சங்கரன் எந்தக் கூட்டத்தில் பேசினாலும் சரி, அப்புவின் நான்கு வருஷ திட்டத்தைப் பற்றிப் பேசாமல் இருப்பதில்லை. அந்த திட்டம் நிறைவேறினால்தான் இந்த உலகத்திற்கு விமோசனம். பாட்டாளி வர்க்கத்தினர் பணக்கார வர்க்கத்தினர் இரண்டு பேருக்கும் விமோசனம் என்று அடித்துப் பேசுவான்.

சங்கரனுக்கு வயது இருபத்து எட்டு; பார்வைக்கு அழகான உருவம். எப்பொழுதும் துல்லியமான வெள்ளை ஜிப்பாவும் பைஜாமாவும் தான் அணிந்து கொள்வான். சுருண்ட கிராப்புத் தலை. தங்க விளிம்பு கட்டிய மூக்குக் கண்ணாடி. நடை, உடை, பாவனை எல்லாம் வாழ்க்கையில் துளிக்கூடக் கஷ்டம் என்பதை அறியாத ஜீவன் என்பதைத்தான் எடுத்துக் காட்டும். சங்கருக்கு சிகரெட் குடிப்பதில் அளவற்ற மோகம். அவனுடைய தகப்பனாரின் பணத்தில் ஒவ்வொரு பைசாவும் புகையாகவே மறைந்து கொண்டிருந்தது என்று சொல்லலாம்.

சங்கரனின் தகப்பனார் அவனைச் சீர்திருத்தம் செய்வது கடினம் என்று உணர்ந்து அவன் எப்படி வேண்டுமானாலும் தொலையட்டும் என்று சொல்லிவிட்டு, தம் வியாபாரத்தில் இன்னும் எப்படி எப்படி எல்லாம் பைசா விகிர்ந்து பைசாவை வரவழைக்கலாம் என்பதில் கவனம் செலுத்தலானார்.

சபேசய்யர் பரம்பரையாகப் பணக்காரரல்ல. ஆரம்பத்தில் நூல் வியாபாரியாகிய செட்டியாரிடம் குமாஸ்தாவாக இருந்து சிறிது சிறிதாக வியாபார நுணுக்கங்களை அறிந்து தானே தனியாக நூல் வியாபாரம் நடத்தத் தொடங்கினார். நாளுக்கு நாள் வியாபாரம் விருத்தியாகப் பத்து வருஷங்களுக்குள் பெரிய பணக்காரராகி விட்டார். யுத்தத்தின் போது ஏற்பட்ட 'கள்ள மார்க்கெட்' அவர் பணத்தை ஒன்றுக்குப் பத்தாக்கி விட்டது.

மிஸ்டர் அப்பு சங்கரனுக்கு நெருங்கிய சிநேகிதனான பிறகு, சங்கரனின் வற்புறுத்தலின் பேரில் ஒரு நாள் அவனுடைய வீட்டுக்குப் போனான். கேட்க வேண்டுமா உபசாரத்துக்கு! சங்கரன் தன் தாயாரிடமும் தங்கையிடமும் மிஸ்டர் அப்புவைப் பற்றியும், அவனுடைய நான்கு வருஷ திட்டத்தைப் பற்றியும் மிகவும் பிரமாதமாகப் புகழ்ந்து கூறினான்.

அப்புவின் கண்களில் சங்கரனின் விவாகமாகாத சகோதரி பிரேமாவின் பொன் மேனியும் வசீகரப் பார்வையும் படவே அவன் மனதில் என்றுமில்லாத ஒரு புதுக் கிளர்ச்சி தோன்றலாயிற்று. இத்தனை நாளும் இல்லாமல் இப்பொழுது அவன் இருதயத்தில் காதல் பாறாங்கல்லைப் போல் உட்கார்ந்து அழுத்தத் தொடங்கியது. அவன் மனதில் இடைவிடாது உறுத்திக் கொண்டிருந்த நான்கு வருஷ திட்டத்தையும் சிறிது மறக்கும்படியாக நேர்ந்ததென்றால் அந்தக் காதலின் சக்தியை என்ன வென்று சொல்லுவது!

'திட்டம் எங்கே ஓடிவிடுகிறது! இந்த எட்டு வருஷமாகப் போட்ட திட்டம் அழிவில்லாமல் அப்படியேதானே இருக்கிறது! ஆனால் காதலும் கலியாணமும் சந்தர்ப்பம் தவறினால் கிடைக்குமா!' என்ற உணர்ச்சி அப்பொழுது தான் அப்புவுக்கு ஏற்பட்டது. (தொடரும்)

வேறொன்றும் கூற தேவையில்லை

சிறந்த பிஸ்கோத்து

# பிரிட்டானியா




BC. 2214

# மழை பொழிந்தது

**வி. எஸ். ஆர்.**

லக்ஷ்மி பூஞ்சோலைக் கிராமத்திலிருந்து பட்டணத்திற்கு வந்து ஒரு வாரம் ஆகியிருந்தது. அவளது பந்துக்களில் சிலர் பட்டணத்தில் வீடுகளில் வேலை செய்து பிழைத்து வந்தனர். அவர்களின் உதவியின் பேரில் பெரம்பூர் பஞ்சாட்சர முதலியார் வீட்டில் அவளுக்கு வேலை கிடைத்தது.

பெரம்பூரில் பஞ்சாட்சர முதலியாரைத் தெரியாதவர்கள் கிடையாது. ஏராளமான சொத்துக்களுள்ள தனவந்தர். வீட்டில் மகளும் மருமகனும் பேரக் குழந்தைகளும் இருந்தனர். குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளுவதும், சாயங்கால வேளைகளில் அவர்களை அழைத்துக் கொண்டு உலாவப் போவதும் லக்ஷ்மியின் வேலை.

பஞ்சாட்சரம் குழந்தைகளிடம் மிகுந்த வாஞ்சை காட்டினார். ஏராள வரும்படியுள்ள தனவந்தருக்குப் பொழுது போக வேண்டாமா? குழந்தைகளை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சுவார். விதம் விதமான விளையாட்டுப் பொம்மைகளும் பரிசுகளும் வழங்குவார். லக்ஷ்மி வீட்டிற்கு வந்ததுமே குழந்தைகளிடம் அவள் காட்டிய அன்பும் ஆசையும் அவர் கவனத்தைக் கவர்ந்தன. இதனால் லக்ஷ்மியிடம் அவருக்கு விசேஷ பிரியமும் மதிப்பும் ஏற்பட்டன.

அன்று காலை குழந்தைகளைக் குளிப்பாட்டி விட்டாள் லக்ஷ்மி. அவர்கள் தலையைத் துவட்டி விட்டு உடைகளை அணிவித்தாள். பேத்தி சாருவும் பேரன் சேகரும் எவ்வளவோ விஷமங்கள் செய்தும் கொஞ்சமும் கோபியாமல் அவர்களுக்குத் தலை வாரி நெற்றிக்குப் பொட்டு இட்டாள். இவற்றையெல்லாம் கூடத்தில் பத்திரிகை படித்துக் கொண்டிருந்த பஞ்சாட்சரம் கவனித்துக் கொண்டுதானிருந்தார்.

“ஏனம்மா, லக்ஷ்மி!” என்று மெதுவாகக் கூப்பிட்டார் அவர்.

உள்ளே போவதற்கிருந்த லக்ஷ்மி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவள் அந்த வீட்டிற்கு வந்து மூன்று மாதங்கள் ஆகியிருந்தன. அவளுடன் அவர் பேசியது இது தான் முதல் தடவை.

“எந்த ஊரம்மா, உனக்கு?” என்று அவளை விசாரித்தார் பஞ்சாட்சரம்.

லக்ஷ்மி சங்கோஜத்தினால் உடம்பை வளைத்து நெளித்துக் கொண்டாள். பற்களெல்லாம் வெளியில் தெரிய முகத்தைத் திருப்பிக் கொண்டு, “பூஞ்சோலையுங்க!” என்றாள்.

“உனக்குக் குழந்தை குட்டிகளுண்டா?”

“தலைச்சன் ஒரு மகனும் இடைச்சன் ஒரு பொண்ணுமிருக்குதுங்க.”

“நான் பார்க்கவேயில்லையே!”

“குழந்தைகள் தகப்பனோடு பூஞ்சோலையிலேயே இருக்கிறார்கள்.”

“அடடே, ஏன் உன் புருஷன் மட்டும் தனியா ஊரிலே இருக்கிறான்?” என்று ஆச்சரியத்துடன் கேட்டார் முதலியார்.

லக்ஷ்மி சிறிது தயங்கினாள். அவள் குரல் கம்மியது. வேதனை நிறைந்த முகத்துடன், “மழையில்லாமல் ஊரிலே வெள்ளாமையேயில்லை. வயிற்றுப் பிழைப்புக்காகப் பட்டணம் போகலாமென்று சொன்னேன். அவருக்குப் பட்டணம் என்றாலே பிடிக்கல்லே. நானாவது கிளம்பி முதல்லே இங்கே வந்தால் அவர் கிளம்பமாட்டாரா என்று நினைச்சேன். மூணு மாசமாகியும் அவர் பிடிவாதமா ஊரிலேயே குந்திக்கிட்டிருக்கிறாரு!” என்றாள் லக்ஷ்மி.

இவ்வாறு கூறிவிட்டுத் தலை நிமிர்ந்து பார்த்த லக்ஷ்மி பஞ்சாட்சரம் ஸ்வாரஸ்யமாகப் பத்திரிகை படித்துக் கொண்டிருப்பதைக் கண்டு மெதுவாக உள்ளே சென்று விட்டாள். தன்னைப் பற்றி விசாரித்து விட்டு, தான் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் முதலியார் பத்திரிகை படித்தது அவளுக்கு ஆச்சரியத்தை அளித்தது.

அன்று வேலை முடிந்த பிறகு லக்ஷ்மி தான் தங்கியிருந்த மாமன் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அவளது மாமன் ஒரு மில்லில் வேலை செய்து வந்தான். வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த மாமனைக் கண்டதும், “மாமா! விசாரித்தீர்களா? ஏதாவது கிடைத்ததா?” என்று ஆதுரத்துடன் கேட்டாள் லக்ஷ்மி. தன் கணவனுக்கு மில்லில் வேலை பார்த்துக் கொடுக்கும்படி அவள் தன் மாமனைச் சிலநாட்களாக நச்சரித்து வந்தாள். மாமன் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு,

"வேலையாவது, வெட்டியாவது! பதினைந்தாம் தேதியன்று மில்லில் ஆளெடுப்பு ஆரம்பிக்கப் போகிறார்களாம். என் சீட்டையும் கிழிக்கப் போகிறார்களோ, என்னமோ!" என்று முனகினான். அசுவாஸ்யத்துடன் லக்ஷ்மி உள்ளே சென்று அத்தைக்கு உதவியாக வேலைகளைக் கவனிக்கலானாள்.

அன்றிரவு முழுதும் லக்ஷ்மிக்குத் தூக்கம் வரவில்லை. சின்னஞ் சிறு குழந்தைகளையும் உயிருக்குயிரான கணவனையும் பிரிந்து அவளால் எப்படி இருக்க முடியும்? அவள் சென்னைக்கு வருவது கொஞ்சங்கூட அவள் கணவன் சபாபதிக்குச் சம்மதமில்லை. எத்தனை கஷ்டம் வந்தாலும் என் சொந்த ஊரை விட்டு வரமாட்டேன் என்று பிடிவாதம் செய்தான். இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டு மனஸ்தாபமும் ஏற்பட்டது. முடிவில், "பட்டணத்திற்குப் போய் நீயே அந்தச் சுகத்தை அனுபவி. பட்டணத்துத் தெருக்களில் தங்கம் ஒன்றும் இறைபடவில்லை!" என்றான் சபாபதி.

"மாமாவை விட்டு உங்களுக்கு ஒரு வேலை தேடி உங்களுக்குக் கடிதமெழுதச் சொல்லுகிறேன். இன்னும் ஒரே வாரத்தில் கடுதாசி போடுகிறேனா இல்லையா, பாருங்கள்" என்று வீம்பாகக் கூறி விட்டுப் புறப்பட்டு வந்திருந்தாள். ஆனால் மாமனே கிராமத்திற்குப் புறப்பட மூட்டை கட்டிக் கொண்டிருப்பது அவளுக்குப் பட்டணத்திற்கு வந்த பிறகுதான் தெரிந்தது. வேலையைப் பற்றி அவள் கண்ட கனவெல்லாம் நிராசையாகி விட்டது. காணாக ஆக என் பட்டணத்திற்கு வந்தோமென்றெண்ணி வருந்தத் தொடங்கினாள். சுகமோ துக்கமோ, இருக்குமிடத்தில் இருந்திருக்கலாமல்லவா? முதலியார் வீட்டில் அவள் வயிற்றுக்கு வேண்டியதைக் கொடுத்து வந்தனர். எஜமானியம்மாள் பழைய பட்டுப் புடவையொன்றை அவளுக்குக் கொடுத்திருந்தாள். அவ்வளவு மெல்லிய அழகிய புடவையை அதற்குமுன் அவள் கட்டிக் கொண்டதில்லை. அதன் மென்மை அவளுக்கு அலாதி பெருமையை அளித்தது. சில தினங்களுக்கு முன் முதலியார் வீட்டிலுள்ள கண்ணாடியில் முதன் முதலாகத் தன்னைப் பார்த்துக் கொண்டதும் அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. தன்னையே அடையாளம் கண்டு கொள்ள அவளால் முடியவில்லை. கிராமத்தில் தண்ணீர்த் தொட்டியில் தன் உருவத்தை அவள் பார்த்துப் பெருமைப் பட்டுக் கொண்டிருக்கிறாள். தன் அழகிற்கு இணையில்லை என்று எண்ணி கர்வப்பட்டிருக்கிறாள். இப்பொழுதோ இவ்வளவு சௌகரியங்களுக்கிடையிலும் அவள் உடல் இளைத்து உருமாறி விட்டது. சாருவையும் சேகரையும் பார்க்கும்போதெல்லாம் தன் குழந்தைகளின் ஞாபகம் அவளுக்கு வராமலிருக்குமா? எப்பொழுது கிராமத்திற்குப் போய்க் குழந்தைகளைக் காணப் போகிறோமென்று எண்ணித் தவித்தது அவள் மனம்.

ஆனால் அவள் மனதில் ஒரு சிறிது ஆசை ஏற்பட்டது. பஞ்சாட்சர முதலியாரிடம் சொல்லித் தன் கணவனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுக்கலாமா என்று நினைத்தாள். ஆனால் அவரிடம் கேட்க அவளுக்குத் தயக்கமாக இருந்தது. 'அவர் என்ன நினைப்பாரோ, என்ன சொல்வாரோ?' என்று பயம் உண்டாயிற்று. ஆயினும் முதலியாரிடம் கேட்பதற்கு ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தாள்.

அன்று முதன் முதலாகப் பஞ்சாட்சரம் அவளுடன் பேசியதும் அவள் ஆசை மீண்டும் மலர்ந்தது. ஆனால் தன் பேச்சுக்குச் செவி கொடாமல் அவர் பத்திரிகை படிக்க ஆரம்பித்தது அவளுக்கு ஏமாற்றமளிக்காமலிருக்குமா?

• • •

மறுநாள் மாலை பஞ்சாட்சர முதலியார் வராந்தாவில் உலாவிக் கொண்டிருந்தார். திடீரென்று மழை பெய்ய ஆரம்பித்தது.



"சொக்காய் போட்டு விடு......!"



கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள்......

"மங்களம், மங்களம்!" என்று தம் பெண்ணைக் கூப்பிட்டார். "மணி ஐந்தாகி விட்டது. குழந்தைகள் பள்ளிக்கூடத்திலிருந்து இன்னும் வரவில்லையே! லக்ஷ்மி குடை கொண்டு போயிருக்கிறாளா?" என்று கேட்டார்.

"லக்ஷ்மி குடை எடுத்துக் கொள்ளாமல் போகிறதே யில்லை" என்றாள் மங்களம். முதலியார் வாசலில் எட்டிப் பார்த்தார். தூரத்தில் சேகரும் சாருவும் சின்னஞ் சிறு குடைக்குள் ஒண்டிக் கொண்டு நடந்து வந்தார்கள். பின்னால் லக்ஷ்மி மழையில் நனைந்து நடந்து வந்து கொண்டிருந்தாள். "மங்களம், பார்த்தாயா நம் குழந்தைகளிடம் அவளுக்கு இருக்கும் வாஞ்சையை?" என்று கூறிச் சிரித்துக் கொண்டார் முதலியார். அப்பொழுது காற்றும் மழையும் குழந்தைகள் கையிலிருந்த குடையை அங்குமிங்கும் அலைத்தன. இந்தச் சமயத்தில் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. 'பாம்!' என்று அலறிக்கொண்டு எதிரே வந்தது ஒரு லாரி! குடையை முன்னே பிடித்துக் கொண்டு வந்த குழந்தைகள் எதிரே வரும் லாரியைப் பார்க்கவில்லை. "ஐயோ!" என்று கூவினாள் லக்ஷ்மி. ஓடிப் பாய்ந்து முன்னே சென்று குழந்தைகளைத் தாண்டி லாரியின் எதிரில் நின்றாள். 'கீல்' என்று மோட்டாரின் 'பிரேக்' சத்தம். மோட்டார் நின்றது! நல்ல வேளையாக யாருக்கும் ஆபத்து ஏற்படவில்லை.

திக்பிரமை யடைந்த பஞ்சாட்சரமும் மங்களமும் மழையைப் பாராமல் தெருவில் ஓடி, குழந்தைகளைத் தூக்கி வாரி யணைத்து, "லக்ஷ்மி! மகராஜியாயிருப்பே; உன் குழந்தைகள் நன்றாயிருக்க வேண்டும்!" என்று வாழ்த்தினார் பஞ்சாட்சரம்.

மறுநாள் தன் சம்பளத்தை ஐந்து ரூபாய் அதிகப்படுத்தி யிருப்பதாகப் பஞ்சாட்சரம் தெரிவித்தபோது லக்ஷ்மி சந்தோஷப்படவில்லை. "எப்படியாவது எம் புருசனுக்கு வேலை சம்பாதித்துக் கொடுங்கள். அதுவே எனக்கு நீங்கள் செய்த பெரிய உதவியாயிருக்கும்" என்றாள் கண்களில் நீர் மல்க. "உன் புருஷனால் என்ன வேலை செய்ய முடியும்?" என்று கேட்டார் பஞ்சாட்சரம். "வெள்ளாமை தெரியும்" என்றாள் லக்ஷ்மி உற்சாகத்துடன். "பட்டணத்திலே வெள்ளாமை தெரிந்தால் போதாது. ஏதாவது தொழில் செய்யத் தெரிந்திருக்கணும். தகர வேலை, தச்சு வேலை, நெசவு வேலை—இந்த மாதிரி தொழில் தெரிந்தால்தான் ஏதாவது வேலை அகப்படும். இருந்தாலும் ஏதோ முடிந்த வரையில் பார்க்கலாம்" என்று பதிலளித்தார் பெரியவர். லக்ஷ்மியின் உற்சாகமெல்லாம் அணைந்துவிட்டது. அவள் வேலை கேட்டதும், "இதோ, என் வீட்டிலேயே உன் புருஷனை வேலைக்கு வைத்துக் கொள்ளுகிறேன்" என்று அவர் சொல்வாரென்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் முதலியார் இவ்வளவு அசிரத்தையுடன் கூறியது லக்ஷ்மிக்கு ஆத்திரத்தை அளித்தது.

சற்று நேரத்திற்கெல்லாம் பழம் வாங்குவதற்காக வெளியில் புறப்பட்டாள் லக்ஷ்மி. பக்கத்தில் பழக்கடைகள் இல்லை. மூன்று மைல் தூரம் நடந்து கடைத் தெருவுக்குப் போய்த்தான் வாங்கியாக வேண்டும். அருகில் ஒரு பழக்கடையாவது இருந்தால் எவ்வளவு சௌகரியமாயிருக்கும் என்று தினந்தோறும் அவள் நினைப்பதுண்டு. அப்பொழுதெல்லாம் அவள் மனதில் ஒரு எண்ணம் தோன்றும். அவரை வரவழைத்து ஒரு பழக்கடையை வைக்கச் சொன்னால் எவ்வளவு நன்றாக இருக்கும்? சேவகம் செய்வதென்றால்தானே அவருக்குப் பிடிக்காது? அவருக்குப் பழவியாபாரம் பிடித்தமான தொழிலாகத்தானே இருக்கும்? ஆனால் கடை வைக்க இடம் வேண்டாமா? விசாரித்ததில் பட்டணத்தில் கடைக்கு இடங் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்குமென்று கேள்விப்பட்டாள். முதலியாரிடம் சொல்லி எங்காவது இடம் தேடலாமா என்றுகூட நினைத்தாள். ஆனால் சற்று

முன் அவர் நடந்து கொண்ட மாதிரியிலிருந்து அதுவும் பிரயோஜனமில்லை என்று தெரிந்து விட்டது. மோட்டாரிலிருந்து அவருடைய குழந்தைகளை அவன் காப்பாற்றியதற்கு ஐந்து ரூபாய் அதிகச் சம்பளம் கிடைத்தது. அவரா கடை வைக்க இடம் சம்பாதித்துக் கொடுப்பவர்?

எதிரில் ஒரு சிறு கூட்டம் நின்று கொண்டிருந்ததைப் பார்த்துத் தயங்கினான். ஒரு சோடாக் கடை வாசலில் அந்தக் கூட்டம் நின்று கொண்டிருந்தது. அந்தச் சோடாக் கடைக்காரர் இடத்தைக் காலி செய்து கொண்டு போகிறாரென்றும் அந்த இடத்தைப் பிடித்துக் கொள்வதற்காக அந்தச் சிறு கூட்டம் முயற்சி செய்வதாகவும் தெரிய வந்தது. பரபரப்புடன் லக்ஷ்மி பக்கத்திலுள்ள கடைக்குள் சென்று விசாரித்தான். "இந்தக் கட்டிடத்தின் மானேஜர் மாடியிலிருக்கிறார், கேட்டுப் பார்!" என்றான் அந்தக் கடைக்காரன். லக்ஷ்மி படிக்கட்டுகளை ஒரே தாண்டாகத் தாண்டி மாடியை அடைந்தான். அங்கே மானேஜரைக் கண்டு பிடித்துத் தன் கஷ்டத்தை அவரிடம் முறையிட்டான். "எப்படியாவது அந்தக் கடையை எங்களுக்குக் கொடுத்து விடுங்கள். எங்கள் குடும்பத்தை நீங்கள்தான் ஒன்று சேர்த்து வைக்க வேண்டும்" என்று கூறும் பொழுதே அவன் கண்களில் நீர் மல்கியது.

"முந்நூறு ரூபாய் அட்வான்ஸ் கொடுத்தால்தான் அந்த இடம் கிடைக்கும். இல்லாவிட்டால் கொடுக்க மாட்டார்கள்" என்று கூறி விட்டார் மானேஜர். "ஐயா! எங்கே நான் முந்நூறு ரூபாய்க்குப் போவேன்?" என்று பரிதாபமாகக் கேட்டான் லக்ஷ்மி.

முடிவில் "ஐயா! எப்படியாவது முந்நூறு சம்பாதித்து நான் கொண்டு வர முடியுமா என்று பார்க்கிறேன். தயவு செய்து நாளை மாலை வரை யாரிடமும் இந்த இடத்தைக் கொடுத்து விடாதீர்கள்" என்று அழ மாட்டாத குறையாகக் கெஞ்சி விட்டுப் போனான் லக்ஷ்மி.



லக்ஷ்மி மழையில் நனைந்து......

பழம் வாங்கிக் கொண்டு திரும்பியதும் முதல் காரியமாகப் பஞ்சாட்சர முதலியாரிடம் வந்து அடக்க வொடுக்கத்துடன் நின்றான். "லக்ஷ்மி! என்ன சேதி?" என்று கேட்டார் முதலியார். "குழந்தைகளைப் பிரிந்து என்னால் வாழ முடியவில்லை" என்றான் லக்ஷ்மி.

"ஏன், ஊருக்குப் போக வேண்டுமென்று சொல்லுகிறாய?"

"இல்லிங்க; அவங்களை இங்கே அழைத்துக்கொண்டு வந்து விடலாமென்று பார்க்கிறேன். உங்களால் வேலை செய்து கொடுக்க முடியாவிட்டாலும் ஒரு முந்நூறு ரூபாய் பணம் கொடுத்து ஒத்தாசை செய்யுங்கள். சம்பளத்தில் பத்துப் பத்தாய்ப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்று கூறிப் பழக் கடை விஷயத்தையும் சொன்னான்.

"சரி, நாளைக்கு யோசித்துச் சொல்கிறேன்" என்று சாவதானமாகப் பதில் சொன்னார் முதலியார்.

பகீரென்றது லக்ஷ்மிக்கு. "சீ, என்ன உலகம் இது! என்ன மனிதர்கள்! சம்பளத்தில் பிடித்துக் கொண்டு கூட முந்நூறு ரூபாய் கொடுக்கக் கூடாதா? "இதோ, தருகிறேன்!" என்று சட்டென்று ஒரு வார்த்தை சொல்ல இவ்வளவு பெரிய தனவந்தருக்கு மனது வரவில்லையே! மனிதர்களை விடப் பணம் உயர்வாகப் போய் விட்டதா!" என்று எண்ணி மனம் நொந்தான்.

மறு நாள் காலை எஜமான் வீட்டிற்குப் போவதற்கே அவனுக்கு இஷ்டமில்லை. இருந்தாலும் கடைசி முறையாகச் சாருவையும் சேகரையும் பார்த்துவிட்டுச் சம்பளத்தையும் வாங்கிக் கொண்டு வந்துவிடுவது என்ற உத்தேசத்துடன் கிளம்பினான். இவனைத் தூரத்தில் கண்டதுமே குழந்தைகள், "ஏன் இத்தனை நேரம் கழித்து வந்தாய்?" என்று சண்டை பிடிக்கத் தொடங்கி விட்டன.

"சொக்காய் போட்டுவிடு!" "பால் கொடு!" என்றெல்லாம் கச்சரித்தன. "நீ வரவில்லை என்று குழந்தைகள் பலகாரம் கூடச் சாப்பிடாமல் உட்கார்ந்திருந்தன" என்று மங்களம் கூறியதும் லக்ஷ்மியின் மனத்தை ஏதோ

செய்தது. இந்தக் குழந்தைகளை விட்டு வேலையிலிருந்து நிற்க நினைத்தோமே என்று எண்ணினாள். சட்டென்று மனதைக் கல்லாக்கிக் கொள்ள முயன்றாள். ஆபத்துச் சமயத்தில் ரூபாய் முந்நூறு கூடக் கொடுக்க இஷ்டமில்லாதவர்கள் வீட்டில் ஏன் இருக்க வேண்டும் என்ற எண்ணமும் உடனே குறுக்கிட்டது.

அன்று வேலை முடிந்ததும் நின்று விடுவதாகக் கூறிச் சம்பளம் வாங்கிக் கொள்வதற்காக முதலியாரைத் தேடிச் சென்றாள். லக்ஷ்மியைக் கண்டதுமே அவர், "லக்ஷ்மி! உனக்கு முந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டிய அவசியமே இல்லை..." என்று கூறிவிட்டுத் தயங்கினார். "சரி, அப்படியானால்..." என்று ஏதோ சொல்ல முயன்ற போது பஞ்சாட்சரம் குறுக்கிட்டு, "அந்தக் கட்டிடத்திற்குச் சொந்தக்காரன் நான்தான். முன் பணம் இல்லாமல் உனக்கே அந்தக் கடையைக் கொடுக்கிறேன்" என்றார்.

குப்பென்று வியர்த்து விட்டது லக்ஷ்மிக்கு. அவர்தான் கட்டிடத்துக்குச் சொந்தக்காரரா? அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை அறிந்து கொள்ளாமல் நடுவில் உளறி வைக்க இருந்தேனே என்று நினைத்து வருந்தினாள். அவள் முகத்தில் குதூகலம் கூத்தாடியது. "எஜமான், உங்கள் உதவியை என்றும் மறக்க மாட்டேன். இப்பொழுதே கடிதாசி எழுதி அவரை வரவழைத்து விடுகிறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பினாள்.

வீட்டுக்குத் திரும்பும்போது, அவளுக்கு இறக்கை முளைத்து ஆகாயத்தில் பறந்து விடுவது போல் தோன்றியது. அவள் கனவுகள் எல்லாம் உயிர்பெற்று எழுந்தன. சிறிது நேரம் சென்றதும் சட்டென்று அவள் மனதில் ஒரு சந்தேகம் தோன்றவே திடுக்கிட்டு நின்றாள். இந்தச் சந்தேகம் ஏன் இதுவரை தன் மனதில் தோன்றவில்லை என்பதுதான் அவளுக்கு ஆச்சரியத்தை அளித்தது. "பழக்கடையாவது, மண்ணாங்கட்டியாவது? நீ சம்பாதித்துக் கொடுக்கும் இடத்தில் நான் கடை வைக்க வேண்டுமாக்கும்? பெண்டாட்டி தயவில் வேலை தேடிக் கொண்டு காலத்தை ஓட்டும் ஆசாமி நான் இல்லை. நான் பட்டணம் வரமாட்டேன்" என்று அவள் கணவன் எழுதி விட்டால் என்ன செய்வது? அவள் கணவன் அவளிடம் உயிரையே வைத்திருந்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சபாபதி தன் மதிப்பையும் சுயகௌரவத்தையும் பாராட்டுபவன். அவன் கடிதத்தைப் படித்துவிட்டு அவன் உரக்கச் சிரிப்பானே தவிர ஒரு நாளும் பட்டணத்துக்குத் திரும்பி வரமாட்டான். வராவிட்டால் என்ன செய்வது? குழந்தையும் குடும்பமும் கிராமத்தில் பட்டினி கிடக்க வேண்டியதுதானே?

இதை நினைத்ததும் அவளுக்கு அழுகையும் ஆத்திரமும் வந்தது. கணவனுக்கு வேலை தேடிக் கொடுக்க அவள் பட்ட கஷ்டம் எல்லாம் வெறும் வியர்த்தம்தான் என்பதை அறிந்தாள். ஆனால் இவ்வளவு கஷ்டப்பட்டுக் கடைக்கு இடம் தேடிய பிறகு எழுதாமல் இருக்கக் கூடாது என்ற எண்ணமும் தோன்றியது. வீட்டுக்கு வந்து மாமாவிடம் சொல்லிக் கணவனுக்கு ஒரு கடிதம் எழுதச் சொன்னாள்.

"அடடே! மறந்துட்டேனே! சற்று முன்னே உனக்கு ஒரு கடிதாசி வந்தது புருசன்கிட்டேயிருந்து. இந்தா!" என்று கூறிவிட்டு மாமன் ஒரு கார்டை அவளிடம் கொடுத்தான்.

"எனக்கு என்ன தெரியும்? நீங்களே படியுங்கள்!" என்றாள் லக்ஷ்மி.

அவள் மாமன் எழுத்துக் கூட்டிப் பின் வருமாறு படித்தான்:

"லக்ஷ்மிக்கு, சபாபதி இப்பவும் எழுதிக் கொண்டது என்னவென்றால், ஊரில் பத்து நாளாக நல்ல மழை பெய்து ஊரெல்லாம் தண்ணீர் நிறைய இருக்கிறது. இனிமேல் மழை பெய்யாவிட்டால் கூட ஆறு மாதத்துக்குப் பயமில்லை. நம்ம தோட்டத்திலே அவரை, புடலை, வெண்டை, கத்திரி எல்லாம் போட்டிருக்கிறேன். வாழையும் நட்டுக் குருத்தும் கிளம்பியிருக்கிறது. கடவுள் புண்ணியத்தில் நாம் பிழைத்துப் போவோம். ஊரே குளுகுளு என்று இருக்கு. என்ன இருந்தாலும் நீ இல்லாமே என் நெஞ்சு கொதிக்கிறது. குழந்தைகள் உன்னைக் காணாமல் கதறுதுகள். உடனே நீ கிளம்பி இங்கே வந்து சேரு.

சபாபதி."

இதைப் படிக்கக் கேட்ட லக்ஷ்மியின் உள்ளம் குளிர்ந்து கண்களில் நீர் பொல பொல வென்று பொழிந்தது. கண்களைத் துடைத்துக்கொண்டு, "மாமா! இன்றைக்குச் சாயங்காலமே கிளம்பிடறேன். இந்தக் கடிதம் மட்டும் நேற்றைக்கு வந்திருந்தால் இந்தப் பட்டணத்தையும் இதிலுள்ள மனிதர்களையும் சபித்துக் கொண்டு சந்தோஷமாகக் கிளம்பியிருப்பேன். ஆனால் இன்று காலையில் முதலியார் இடம் கொடுப்பதாகச் சொன்ன பிறகு, இந்த ஊரை விட்டுப் போகவே மனம் இல்லைதான். எஜமான் வீட்டுக் குழந்தைகளை ஒரு தடவை பார்த்துவிட்டுக் கிளம்ப வேண்டும்" என்றாள்.

"பாவம், லக்ஷ்மி!" என்று கூறி, மாமன் அத்தையைப் பார்த்தான்.

# பயம்

குட்டிக் கதை 10

**வா**னுலகிலே யமதர்ம ராஜனின் தர்பார் நடந்து கொண்டிருந்தது. யமகிங்கரர்கள் பூலோகத்திலிருந்து பிடித்துக்கொண்டு வந்திருந்த ஜீவராசிகளை அவனுக்கு ஒவ்வொன்றாக அறிமுகப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தனர். அவரவர்கள் செய்த குற்றத்துக்குத் தக்கபடி யமராஜன் தண்டனை விதித்துக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில் எந்த விதமான முன்னறிவிப்புமின்றி இரண்டு ஜீவன்கள் வியர்க்க விறுவிறுக்க ஓடி வந்து யமனுக்கு முன்னால் நின்றன.

அவற்றில் ஒன்று மனிதன்; இன்னொன்று பாம்பு.

"சமய சந்தர்ப்பம் தெரியாமல் இவர்களை எனக்கு முன்னால் திடீரென்று கொண்டு வந்து நிறுத்தியவர்கள் யார்?" என்று பொங்கி வந்த கோபத்தில் துள்ளி எழுந்து கேட்டான் யமராஜன்.

யமகிங்கரர்கள் பீதியுடன் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஏனெனில் அந்த ஜீவன்களைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது.

"உங்களில் யாரும் இவர்களை அழைத்துக் கொண்டு வரவில்லையா?" என்று யமதர்மராஜன் மீண்டும் உறுமினான்.

"இல்லை, அரசே!" என்று யமகிங்கரர்கள் நடுங்கிக் கொண்டே கையை விரித்தனர்.



அடுத்த கணம் யமதர்ம ராஜனின் பார்வை சித்திர குப்தனின் பக்கம் திரும்பியது.

அவன் தன் ஆசனத்தை விட்டு எழுந்து நின்றான்.

"உமக்கு இவர்களைப் பற்றி ஏதாவது தெரியுமா? நீர் தான் இவர்களை அழைத்துக் கொண்டு வரச் சொன்னீரா?" என்று யமன் சித்திரகுப்தனை நோக்கிக் கேட்டான்.

"எனக்கும் இவர்களைப் பற்றி ஒன்றும் தெரியாது; நான் இவர்களை அழைத்துக் கொண்டு வரச் சொல்லவும் இல்லை" என்றான் சித்திரகுப்தன்.

"சரி; இவர்களுடைய ஆயுசு முடிந்து விட்டதா என்று உம்முடைய கணக்குப் புத்தகத்தைப் புரட்டிப் பாரும்!" என்று யமராஜன் கட்டளையிட்டான்.

சித்திரகுப்தன் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே, இப்படியும் அப்படியுமாகச் சிறிது நேரம் புத்தகத்தைப் புரட்டினான். பிறகு, "இல்லை; இவர்களுடைய ஆயுசு இன்னும் முடியவில்லை" என்றான்.

மறுகணம் யமதர்ம ராஜனின் பார்வை அந்த மனிதனின் மீதும் அந்தப் பாம்பின் மீதும் விழுந்தது.

"இது என்ன ஆச்சரியமாயிருக்கிறதே! நீங்களாகவே என்னைத் தேடி வந்து விட்டீர்களா, என்ன?" என்று அவர்களை நோக்கிக் கேட்டான் யமன்.

"ஆம், யமப் பிரபுவே!" என்று சொல்லிவிட்டு, இரண்டு ஜீவன்களும் தலை குனிந்தன.

"அப்படியானால் நீங்கள் இங்கே வருவதற்கு முன்னால் செத்திருக்க வேண்டுமே!-யார் உங்களைச் சாக அடித்தது?"



"எங்களை நாங்களே சாக அடித்துக் கொண்டோம்!"

"வேடிக்கைதான்; இந்த விபரீதம் எப்படி நிகழ்ந்தது?"

"இதோ இருக்கிறதே, இந்தப் பாம்புதான் என்னை முதலில் கடித்தது; இரண்டாவதாக இதை நான் அடித்தேன். கடைசியில் இருவரும் மடிந்தோம்" என்றான் மனிதன்.

பாம்பு ஒன்றும் சொல்லவில்லை; தலையைக் கீழே போட்டது போட்டபடி இருந்தது.

"இதற்குக் காரணம் என்னவாயிருக்கும்?" என்று கேட்டவாறே யோசனையில் ஆழ்ந்தான் யமன்.

சித்திரகுப்தன் அந்தச் சிரமத்தை யமனுக்கு வைக்கவில்லை. "மனிதனைக் கண்டால் பாம்புக்குப் பயம்; பாம்பைக் கண்டால் மனிதனுக்குப் பயம். பரஸ்பரம் இருந்த பயம்தான் தங்களைத் தாங்களே இவர்கள் சாக அடித்துக் கொண்டதற்குக் காரணம்!" என்று அவன் விஷயத்தை விளக்கினான்.

"அப்படியானால் பயம் என்னை விடக் கொடியது போலும்!" என்றான் யமராஜன் சிரித்துக் கொண்டே.

— விந்தன்

# காலக்ஷேபம்

### எப்படி?

உபாத்தியாயர்:—கிட்டு, நீ எழுதிக் கொண்டு வந்த வியாசத்தில் "ஏழே கால் மணி அடித்தது" என்று எழுதியிருக்கிறது. அது பிசகு. கடிகாரம் கால் மணி அடிக்காது.

கிட்டு:—இல்லை, ஸார்! எங்கள் வீட்டுக் கடிகாரம் கால் மணி மெதுவாகப் போகிறது!

★

### பேஷ்!

புதிதாகத் திறக்கப்பட்ட ஒரு பாங்கியில் இரவு காலத்தில் காவல் காப்பதற்கு ஓர் ஆள் வேண்டும் என்று விளம்பரம் செய்திருந்தார்கள். அதற்கு ஒருவன் வந்து விண்ணப்பம் செய்து கொண்டான்.

பாங்கிக் காரியதரிசி:—உனக்கு இந்த மாதிரி வேலையில் முன்னால் பழக்கம் இருக்கிறதா?

அவன்:—முன்னால் பழக்கம் எதுவும் இல்லை; ஆனால் ஒரு சின்ன ஓசை கேட்டாலும் நான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு விடுவேன்!

★

### ரொம்ப மோசம்!

"என் மனைவியின் ஞாபக சக்தி ரொம்ப மோசம்! அப்பப்பா!"

"ஏன்? எல்லாவற்றையும் மறந்து விடுகிறாளாக்கும்!"

"இல்லை, இல்லை! எல்லாவற்றையும் ஒன்றுகூட விடாமல் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாள்!"

### சரிதான்!

டிராமில் ஒருவர் ஓட்டை விழுந்த ஓர் அணாவைக் கொடுத்து டிக்கெட் வாங்கி விட்டார். கண்டக்டர் முதலில் அதைக் கவனிக்காமல் வாங்கிப் போட்டுக் கொண்டான். பிறகு கவனித்ததும் அவரிடம் வந்து, "ஸார், இது நீங்கள் கொடுத்த அணாத்தானே?" என்று கேட்டான்.

கொடுத்தவர்:—ஆமாம், ஏன்?

கண்டக்டர்:—அதில் ஓட்டை விழுந்திருக்கிறதே!

கொடுத்தவர்:—அதனால் என்ன, நீ கொடுத்த டிக்கட்டிலும்தான் ஓட்டை போட்டிருக்கிறது!

★

### ஞாபக சக்தி

"முடியாது என்று நிச்சயமாகத் தெரிந்த பிறகு மூர்த்தி ஏன் அதுபற்றி வருந்துகிறான்? அந்தப் பெண்தான் அவனைக் காதலிக்கவில்லை என்று நிர்தாட்சண்யமாகச் சொல்லி விட்டாளே! பிறகு அவளை மறந்துவிட வேண்டியதுதானே?"

"அவன் எப்படி அவளை மறப்பான்? அவன் நினைத்தாலும் கூட அவனால் அது முடியாது. அவன்தான் ஞாபக சக்திக்காகப் பள்ளிக்கூடத்தில் நிறையப் பரிசுகள் வாங்கியிருக்கிறானே!"

# மாட்டுப்பெண் சொல்லுகிறாள்

அம்புஜம்

அவருக்கு அன்று ஆபிஸில் கடுமையான வேலை போலிருக்கிறது. எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு வீடு திரும்பும்போது மிகவும் களைப்புற்றவராக இருந்தார். "உஸ், அப்பா!" என்று தன் களைப்பை வெளிப்படுத்திக் கொண்டு அவர் உடை மாற்றும் சமயம் நான் அவரிடம் போனேன்.

"ஏன், இன்று கடுமையான வேலையோ!" என்று கேட்டேன் பரிவுடன். அந்தச் சமயத்தில் என் பரிவு அவருக்கு வேண்டியிருக்கவில்லை. "உம்" என்று முனகிவிட்டுக் குளிக்கும் அறைக்குள் புகுந்து கொண்டார்.

சிற்றுண்டி சாப்பிடும்போது நான் மறுபடியும் ஆரம்பித்தேன். "நாளைக்கு வண்டி எத்தனை மணிக்கு வருகிறது!" என்று கேட்டேன்.

"ஏன்!" என்று கேட்டார் அவர்.

"அதற்குள் மறந்து விட்டீர்களே! நாளைக்கு ராஜுவும் அப்பாவும் வருகிறார்களே!"

"ஓஹோ!" என்றார் அவர். வேலைத் தொந்தரவில் தன் மாமனாரும் மைத்துனனும் வருவதை அவர் மறந்து விட்டார் போலும்!

சிற்றுண்டி, அருந்தி முடிந்ததும் அவர் மாமனாரையும் மைத்துனனையும் வரவேற்க ஏற்பாடு செய்வதில் முனைந்தார். நானும் அப்பாவுடனும் சகோதரனுடனும் போக வேண்டிய இடங்களையெல்லாம் பற்றித் திட்டமிட ஆரம்பித்தேன்.

* * *

"இன்று என்ன புரோகிராம்!" என்று கேட்டபடி உள்ளே நுழைந்தார் அவர்.

"உங்கள் 'புரோகிராம்' என்ன!" என்று திருப்பிக் கேட்டேன்.

"என் 'புரோகிராம்' இன்று ஜோரான தமிழ்ப் படம்" என்றார் அவர்.

"என் திட்டம்...." என்று அன்றையச் சிற்றுண்டி, இரவுச் சமையல் திட்டத்தை நான் சொன்னேன். அதற்குள் அப்பாவும் ராஜுவும் அங்கு வந்து விட்டனர். நான் எல்லோருக்கும் சிற்றுண்டி கொடுப்பதில் ஈடுபட்டேன். அன்றைய 'புரோகிரா'மைக் கேட்டதும் "இப்படி தினமொரு இடத்திற்கு அலைந்து கொண்டிருந்தால் உடம்பு என்னத்திற்கு ஆகும்!" என்று அப்பா ஆக்ஷேபித்தார்.

"ஜோரான தமிழ்ப் படம், அப்பா!" என்று வற்புறுத்தினேன் நான். தனிக் குடித்தனம் ஆரம்பித்த பின், இரண்டு வருஷங்களாக என் புக்ககத்து மனிதர்களையே நான் வரவேற்று உபசரித்திருக்கிறேன். முதல் முதலில் பிறந்தகத்து மனிதர்களை உபசரிப்பதில் எனக்கு ஏற்பட்ட உற்சாகத்தைக் கேட்க வேண்டுமா!

இரண்டு மூன்று வாரங்களாகக் கண்ட இடத்திற்கு அலைந்ததிலும், நாளுக்கு நாலு வேளை விதவிதமான சமையலும் பக்ஷணங்களும் செய்ததிலும் எனக்கு ரொம்பவும் களைப்பாக இருந்தது. ஓய்வையே விரும்பாத அவர்கூட இரண்டு நாள் லீவு எடுத்துக் கொண்டு விட்டார்!

அன்று, "வீடே 'வெறி'ச்சென்று கிடக்கிறது!" என்றேன் நான்.

"அவர்கள் போய் ஒரு வாரமாகிறது; இன்னும் போய்ச் சேர்ந்ததாகக் கடிதம் எழுதக் காணோமே!" என்றார் அவர்.

அதற்குள் என் உள்ளம் முன் தினம் வந்த கடிதத்தைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்தது. ஆம், வரப்போகும் செவ்வாயன்று என்னுடைய மாமியாரும் நாத்தனாரும் வருவதாக எழுதி யிருந்தார்கள்.

"செவ்வாய்க் கிழமைக்குள் அந்தப் புடவையை எடுத்து வந்து விட்டால் தேவலை!" என்றேன் நான்.

"ஏன், அதற்குள் என்ன அவசரம்! அம்மாவும் ராஜமும் வந்து விடட்டுமே!"

என் நாத்தியின் சுபாவம் எனக்கு நன்கு தெரியும். இங்கிதம் என்பதே தெரியாதவள் அவள். தன்னைப் போலவே மற்றவருக்கும் ஆசையென்பது ஒன்று இருக்கிறதென்பதை நினைத்துப் பார்க்காதவள். தனக்கு ஒரு ஆசை தோன்றிவிட்டால் மற்றவர்களை அது எப்படிப் பாதித்தாலும் சரி, நிறைவேற்றிக் கொண்டு விடுவாள்.

இப்போது நான் புடவைக்குப் பணம் வைத்திருக்கிறேனென்று தெரிந்தால் அவளுக்கும் புடவையின் தேவை ஏற்பட்டுவிடும். அவளிடம் உள்ள புடவைகளெல்லாம் மாயமாக மறைந்து விடும். அப்புறம்......இப்படி யோசித்த எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. புடவைக்காக வைத்திருக்கும் பணம் அவர் தந்ததென்றால் நான் இப்படியெல்லாம் யோசிக்க மாட்டேன். ஆனால் இது என் அண்ணா தந்த பணம். ஏதோ கட்டுரைப் போட்டியில் கிடைத்த பரிசை எனக்கு முதல் முதலாக அளித்து, "எப்போதும் என் நினைவு இருக்கும்படி ஏதாவது வாங்கிக் கொள்" என்று அவன் சொல்லி யிருந்தான்.

* * *

ஜயாவும் அவள் தாயாரும் செவ்வாய்க் கிழமை காலை வந்து சேர்ந்தனர். மாமியாரும் நாத்தனாரும் வீட்டில் காலடி எடுத்து வைத்ததிலிருந்து நான் புது மனுஷியாக மாறி விட்டேனாம். வானம்பாடிபோல் ஓடியாடி வேலை செய்பவள் நிதானமாக வேலைகளைக் கவனிக்கிறேனாம். மொத்தத்தில், நான் வீட்டில் இருப்பதே தெரியவில்லையாம். இது அவர் அபிப்பிராயம். இந்த அபிப்பிராயத்தை உறுதிப் படுத்த வந்து சேர்ந்தாள் அடுத்த வீட்டுக் கமலம்.

"ஜானகி! உன்னை இப்போதெல்லாம் வெளியில் பார்ப்பதே அபூர்வமாக இருக்கிறதே!"

"அவ்வளவுதான்; நாங்களெல்லாம் வந்துதான் அவள் வீட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறோமே!" என்றாள் ஜயா.



"ஆமாம்; நீங்கள்தான் அவளை வெளியே வர வேண்டாம் என்கிறீர்களாக்கும்!" என்றாள் கமலம்.

"நாங்கள் அப்படிச் சொல்லா விட்டாலும் அவள் அப்படி நினைத்துக் கொண்டிருக்கிறாளோ, என்னமோ!" என்றாள் என் மாமியார்.

எனக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது.

"வீட்டில் மனிதர்கள் வந்து விட்டால் வெளியில் அதிகமாக வரமுடியாதுதான்!" என்று ஆரம்பித்தாள் கமலம் மறுபடியும்.

"அவள் அப்பா எல்லோரும் வந்திருந்தார்களே, அப்போதும் இப்படித்தானே!" என்று கேட்டாள் ஜயா.

"அதுதான் இல்லை" என்று கமலம் சொல்வதற்குள், "அதுவும் இதுவும் என்னடி, ஜயா! நீ ஒண்ணு!" என்றாள் மாமியார்.

இதைக் கேட்டதும், 'எல்லோரையும் ஒன்றாகத்தான் நாம் நினைக்கிறோம். இவர்கள்தான் வேற்றுமை கொண்டாடுகிறார்கள்!' என்று நினைத்தது என் உள்ளம். விவாகமானதும் புக்ககத்தாரோடு இணைந்து விட்டமாதிரி உணர்ச்சி உண்டாகிறது பெண்களுக்கு. ஆனால் அவர்களோ, பிள்ளையையும் மாட்டுப் பெண்ணோடு சேர்த்து வேற்று மனிதர்களாகப் பாவிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். விவாகமாவதற்கு முன் மகன் என்ன செய்தாலும், என்ன சொன்னாலும் அவர்களுக்குக் குற்றமாகத் தோன்றாது. விவாகமான பிறகோ அதே விஷயங்கள் அவர்களுக்குக் கோபமூட்டுகின்றன. இதன் காரணம் என்னவோ! மனோதத்வ ஆராய்ச்சியாளர்தான் சொல்லவேண்டும்!

மாமியார் வந்ததிலிருந்து தினமும் அதிகாலையில் எழுந்து நான் ஸ்நானம் செய்ய வேண்டியிருந்தது. வெந்நீர் போட்டுச் சாவகாசமாக எட்டு மணிக்கு ஸ்நானம் செய்து பழக்கப்பட்ட உடம்பு இதனால் முரண்டு செய்தது. ஜலதோஷம் பற்றிக் கொண்டது. ஸ்நானம் செய்யாமல் பண்ணிய சமையலை மாமியார் தொடமாட்டாள் என்ற காரணத்திற்காக இவ்வளவு சிரமப்படும் என்னை ஒருநாள் அவர் கோபித்துக் கொண்டார். அதன் பயனாக நான் அன்று ஸ்நானம் செய்யாமல் சமையல் செய்ததும்—மறுநாள் என் மாமியார் காலை மூன்று மணிக்கு எழுந்து ஸ்நானம் செய்து மத்தியானமெல்லாம் தலைவலி, காய்ச்சல் என்று கத்தியதும்—அப்பப்பா!

அந்தச் சமயம் எனக்கு ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது. என் தந்தை இங்கு வந்திருந்தபோது அது நிகழ்ந்தது. கூடத்தில் படித்துக் கொண்டிருந்த அப்பாவை அடுப்புப் புகை படுத்துமே என்று சமையல் அறைக் கதவைச் சாத்தினேன். குளிக்கும் அறையில் இருந்த அண்ணாவுக்காகச் சமையலறையின் இன்னொரு கதவையும் சாத்தி விட்டேன். அப்போது என் தகப்பனார் வந்து, "அட அசடே, மற்றவர்கள் கஷ்டப்படக் கூடாது என்பதற்காகத் தன் மேலேயே எல்லாக் கஷ்டத்தையும் யாராவது சுமந்து கொள்வார்களா!" என்று கதவுகளைத் திறந்து விட்டார். அந்த அன்பை இன்றைக்கு நினைத்துப் பார்த்த என்னுடைய கண்கள் நீரைச் சொரிந்தன.

அன்று தன் அம்மாவோடும் தங்கையோடும் அரட்டையடித்துக் கொண்டிருந்த அவர், "உனக்குத் தெரியுமா, ஜயா! நம்ம ஜானகி அண்ணாவுக்கு ஒரு பரிசு கிடைத்தது. அதை அப்படியே தங்கையின் பாதங்களில் காணிக்கையாக வைத்து விட்டான். எப்படி!" என்று கேட்டார்.

"அதைத் தங்கைக்குக் கொடுக்க வேண்டுமென்று அவருக்குத் தோணித்தாக்கும்!" என்றாள் ஜயா ஒரு மாதிரியான குரலில்.

"கல்யாணமாவதற்கு முன்னே அவரவர்கள் வேண்டியவர்களுக்குச் செய்து ஆசையைத் தீர்த்துக் கொண்டு விடவேண்டும்!" என்றாள் என் மாமியார்.

"ஆமாம்" என்று என்னை ஒரு மாதிரியாகப் பார்த்துக்கொண்டு சொன்ன ஜயா, அத்துடன்

விட்டுவிடவில்லை. அவர் எழுந்து போனதும், "இல்லாவிட்டால் பாரேன்! முன்னே எல்லாம் சங்கீதக் கச்சேரிக்கோ, சினிமாவுக்கோ போனால், திரும்பி வரும்போது நானும் அண்ணாவும் எப்படிப் பேசிக்கொண்டே வருவோம்! இப்போது அப்படி முடியுமா!" என்றாள்.

"இப்போ மட்டும் என்ன! உனக்கு இல்லாத உரிமை யாருக்கு!" என்றாள் என் மாமியார்.

"இப்போதைய நிலைமையே வேறு, அம்மா! அநேகமாக அண்ணாவே விரும்பமாட்டான். அப்படித்தான் அவன் விரும்பினாலும் . . ."

முடிக்காமலேயே வாக்கியத்தை நிறுத்தினாள் ஜயா.

எனக்கு அழுகையே வந்துவிட்டது. என்னை ஏன் இவர்கள் இப்படிக் கரித்துக் கொட்டுகிறார்கள்! தங்கைக்கு ஒன்றும் செய்யக்கூடாதென்று நான் சொல்லவில்லையே! போன தடவை ஜயா இங்கு வந்திருந்தபோது, நான் அரும்பாடு பட்டுப் பணம் சேர்த்து வாங்கிய 'ஸ்டவ்'வை அவளுக்குத் தூக்கிக் கொடுக்கவில்லையா, அவர்! அதை அவளுக்குக் கொடுத்தபோது என் இதயம் வேகமாக அடித்துக் கொண்டாலும், என் உணர்ச்சிகளை வெளியே காட்டினேனா! என்னைச் சோதிப்பதற்காகவே அந்த 'ஸ்டவ்'வை நானே பெட்டியில் வைத்துத் தரவேண்டும் என்றாரே அவர்! பிரயாணத்திற்குப் பெட்டியைத் தயாரிக்க அவளுக்குத் தெரியாதாம். இன்னும் இது போல் எத்தனை சம்பவங்கள்! அண்ணாவும் தங்கையும் குஷியாகச் சம்பாஷிப்பதற்குத் தடையாக நான் ஒருபோதும் இருந்ததில்லையே! என்னவானாலும் சரி; இன்று இவர்களுடன் எங்கும் போவதில்லை. ஆனால், நான் போகாவிட்டால் அவர்களுக்கு என்ன! அதற்கும் என் மீதே குற்றம் சாட்டிவிட்டுப் புறப்படுவார்கள்!

அன்று மாலை, "ஸ்ரீமதி ஜானகி தேவியின் அலங்காரம் முடியவில்லையாக்கும்" என்றார் அவர், தங்கையும் அம்மாவும் மட்டும் புறப்பட்டு வருவதைப் பார்த்து.

இருவரும் பதில் சொல்லாமல் இருக்கவே, "என்ன சமாசாரம்!" என்று கேட்டார்.

"அவள் வரவில்லையாம்!" என்றாள் ஜயா.

"ஏன்!"

"காலையிலிருந்தே 'உம்'மென்று இருக்கிறாள். அவளுக்கு என்ன கோபமோ!" என்றாள் மாமியார்.

ஜயா, அம்மாவை முறைத்துப் பார்த்தாள். நாசூக்காக இருக்கத் தெரியவில்லை அம்மாவுக்கு என்பது அவள் அபிப்பிராயம்.

இவர்களுடைய நயன பாஷையைப் புரிந்து கொள்ள முடியாத அவர் பொறுமை இழந்து, "என்னதான் நடந்தது, சொல்லுங்களேன்!" என்றார்.

அவ்வளவுதான்; "ஏண்டாப்பா, நாங்கள் தான் அவளை ஏதாவது சொல்லியிருப்போமென்று உனக்குத் தோன்றுகிறதோ! நானும் எவ்வளவோ கேட்டுப் பார்த்துட்டேன்; சொல்லவில்லை. நீதான் கேட்டுப் பாரேன்! ஆமாம்; நீ கேட்டால் மட்டும் சொல்லிவிடப் போகிறாளாக்கும்! நீ கூப்பிட்ட உடனே வந்துவிடப் போகிறாளாக்கும்!" என்று படபடத்தாள் மாமியார்.

தடதடவென்று சமையலறைக்கு வந்தார் அவர். குமுட்டியை விசிறியபடி அதிலிருந்து தெறிக்கும் நெருப்புப் பொறிகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த என் தோற்றம் அவருடைய ஆத்திரத்தை அதிகரிக்கச் செய்தது. "ஜானகி!" என்று அதட்டினார். நான் திடுக்கிட்டு நிமிர்ந்தேன்.

"இன்று நாங்கள் ஒரு நாட்டியக் கச்சேரிக்குப் போகிறோம். நீ வரப்போவதில்லையா!"

மௌனம்.

"என்ன காரணம்! என்ன நடந்தது!"

நான் பதில் சொல்லவில்லை.

"சரி; நீ பிகு பண்ணிக் கொள்வதும், நான் வற்புறுத்துவதும் திரும்பி வந்த பின் நடக்கட்டும். இப்போது உடனே புறப்படு!" என்றார்.

"நான் வரவில்லை" என்றேன்.

"தீர்மானமாகவா!"

நான் பேசாமல் இருக்கவே அவர் ஆத்திரத்துடன் இரைந்தார்:




ஸலூன்காரர்:—இப்பொழுது எங்கே பார்த்தாலும் 'கட்' பேச்சாகவே இருக்கிறது, ஸார்! ரேஷனைக் கட் பண்ணி விட்டார்கள், சம்பளத்தைக் கட் பண்ணி விட்டார்கள், கூலியைக் கட் பண்ணி விட்டார்கள் ......

வாடிக்கைக்காரர்:— அதற்காக நீ என் முகத்தைக் கட் பண்ணி விடாதே, அப்பா!

"உன் எண்ணம் எனக்குத் தெரியவில்லை என்று நினைக்காதே! ஐயாவும் அம்மாவும் இங்கே வந்து சற்றுச் சந்தோஷமாக இருப்பது உனக்குப் பிடிக்கவில்லை. உன் வீட்டு மனிதர்கள் வந்தால் கும்மாளம் அடிப்பாய். அப்போது யார் என்ன செய்தாலும் சந்தோஷப் படுவாய்!"

"அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்! புருஷர்களின் சொரூபம் இன்றுதான் எனக்குத் தெரிந்தது" என்றேன் நான்.

அவர் கோபத்துடன் முறைத்துப் பார்த்தார். அடுத்த கணம் என் கன்னத்தில் பளீரென்று ஒரு அறை விழுந்தது. மனைவிமீது எறும்பு ஊர்ந்தால்கூடச் சகிக்காத அவர் என்னை முரட்டுத்தனமாக அடித்து விட்டார். காரணம்! மாமியார்-மருமகள் மனஸ்தாபம். இந்த மனஸ்தாபம் எப்போதுதான் ஒழியும் என்று யோசித்தபடியே திண்ணைக்கு வந்தேன் நான்.

"உன்னை விட்டுவிட்டு அவர்கள் மட்டும் போய் விட்டார்களே!" என்று ஆரம்பித்தாள் கமலம்.

"போதுமடி, நீ வேறு கிளப்பி விடாதே!" என்று ஆரம்பித்த நான், என் மனதிலுள்ளதை எல்லாம் அப்படியே கொட்டித் தீர்த்து விட்டேன்.

"காரணம் இல்லாமல் மனிதர்களின் நடவடிக்கைகள் மாறுவதில்லை. பிறந்தகத்தார் வந்தால் பிடிக்கிறது என்றும் புக்ககத்தார் வந்தால் பிடிப்பதில்லை என்றும் நம்மைக் குற்றம் சாட்டுகிறார்களே, பிறந்தகத்தார் நம்மை அதிகாரப் படுத்த வரமாட்டார்கள், நம் காரியங்களில் குற்றம் கண்டு பிடிக்க வரமாட்டார்கள், நாம் சந்தோஷமாக வாழ்வதைப் பார்த்து மகிழ்ந்து அதிலே திருப்தி காண்பார்கள். புக்ககத்தாரோ, தங்கள் அதிகாரத்தை உபயோகிக்கவே வருகிறார்கள். நாம் என்னதான் பயபக்தியுடன் நடந்து கொண்டாலும் அதிருப்தியே அவர்கள் பதவியின் இயல்பு. மாமியார் - மருமகள் அன்னியோன்யமாக வாழ முடியாது என்ற எண்ணம்தான் அதற்குக் காரணமாயிருக்குமோ, என்னமோ......!"

இந்தச் சமயத்தில் என் உள்ளம் மறுகுவது போலவே அடுப்பில் வைத்த எண்ணெயும் மறுகும் வாசனை வந்தது. சமையலை முடிக்க அவசரமாக உள்ளே ஓடினேன். கமலமும் தன் காரியத்தைக் கவனிக்கச் சென்றாள்.

# சாவித்திரியின் மாமியார்

ராஜேஸ்வரி

"சாவித்திரி! நான் சொல்வதைக் கேள். நீ உன் அப்பாவுடன் ஊருக்குப் போ. அது தான் உனக்கும் நல்லது, எனக்கும் நல்லது" என்றான் மூர்த்தி.

"அது தான் முடியாத காரியம். நான் இப்போது அப்பாவுடன் போக மாட்டேன்" என்றாள் சாவித்திரி.

"எனக்குத் தோன்றியதைச் சொன்னேன். அப்புறம் உன் இஷ்டம். இங்கேயே இருந்து அம்மாவிடம் இடிபடுவதுதான் உனக்குப் பிடித்திருக்கிறதென்றால் நீ போக வேண்டாம்."

"சரி, சரி. ஊருக்குப் போவதைப் பற்றிக் காலையில் பேசிக் கொள்ளலாம். அம்மாவைப் பற்றி அப்படியெல்லாம் இழிவாகச் சொல்லாதீர்கள். அன்னையும், தந்தையும் தானே கண் கண்ட தெய்வம்! 'பேயானாலும் தாய்; நீரானாலும் மோர்' என்று பெரியோர்கள் கூறுவதை நீங்கள் கேட்டதில்லையா! அதனால், அம்மாவைப் பற்றி அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள். பேசாமல் படுத்துக் கொண்டு தூங்குங்கள்" என்றாள் சாவித்திரி.

இதைக் கேட்ட மூர்த்தியின் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. 'பேயானாலும் தாய் என்று கூறியதில் தவறென்ன! தன் தாய் மருமகளிடம் சிறிதளவாவது அன்புடன் இருக்கிறாளா!' என்று எண்ணியது அவன் மனம். அவன் சிந்தனை கட்டவிழ்ந்த காளை போல் பின்னோக்கிச் சென்றது.

* * *

தகப்பனாரற்ற குழந்தையாகிய மூர்த்தியை அவன் தாயார் மீனாக்ஷி மிகவும் கஷ்டப்பட்டு எஸ். எஸ். எல். ஸி. வரை படிக்க வைத்தாள். அதற்கு மேல் அவளால் படிக்க வைக்க முடியவில்லை. மூர்த்தியும் தன் பொறுப்பை உணர்ந்து அத்துடன் படிப்பை முடித்து விட்டு வேலை தேட ஆரம்பித்தான். பல பெரிய மனிதர்களின் சிபார்சினாலும், தன் புத்தி சாதுர்யத்தினாலும் ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக அமர்ந்தான். தனது திறமையினால் ஆபீஸில் எல்லோருடைய பாராட்டுதலையும் பெற்றதுமின்றி, பெரிய பதவியையும் வகித்தான். இந்த நிலையில் அவனுக்குப் பெண் கொடுக்கப் பலர் முன் வந்தனர். ஆனால், அவனோ கண்டிப்பாக மணம் செய்து கொள்ள மறுத்து விட்டான். மீனாக்ஷி எவ்வளவோ கெஞ்சினாள்; கூத்தாடினாள். அதன் பலனாகக் கடைசியில் அவன் வக்கீல் ராமச்சந்திர ஐயரின் பெண்ணான சாவித்திரியை மணக்க நேர்ந்தது.

சாவித்திரி அழகும், குணமும் நிறைந்த புத்திசாலிப் பெண். அவள் தகப்பனார் ராமச்சந்திர ஐயருக்கு ஒரே பெண். பின் செல்லத்திற்குக் கேட்க வேண்டுமா! ஆனால் சிலரைப் போல் அளவுக்கு மீறிச் செல்லம் கொடுத்துத் தன் பெண்ணை அசட்டுப் பிடிவாதமும், முரட்டுக் குணமும் உள்ளவளாக வளர்த்து விடவில்லை.

சாவித்திரியை மணந்து கொண்ட மூர்த்தி தன்னைப் போன்ற பாக்கியசாலி யாருமே இருக்க முடியாது என்று நினைத்துப் பெருமை கொண்டான். மீனாக்ஷியும் தன் பிள்ளையின் அழகைப் பற்றியும், தன் நாட்டுப் பெண்ணின் குணத்தைப் பற்றியும், ஊரில் எல்லோரிடமும் பெருமையாகச் சொல்லிக் கொண்டாள். ஆனால் அதெல்லாம் எத்தனை நாட்களுக்குத் தான் நீடிக்கும்!

இதுவரை தன் மாமனார் வீட்டருகிலேயே இருந்து வந்த மூர்த்தி, திடீரென்று கோயம்புத்தூருக்கு மாற்றப்பட்டுத் தன் குடும்பத்துடன் அங்கு போய்ச் சேர்ந்தான். சாவித்திரியைத் தன் பெண்போல் பாவித்து வந்தாள் மீனாக்ஷி. அவர்கள் ஒற்றுமை கடவுளுக்கே பொறுக்கவில்லை போலும்! இல்லாவிடில் பக்கத்து வீட்டில் குடியிருக்கும் காமாக்ஷி, இவர்கள் வீட்டுக்கு வருவானேன்! முதன் முதலில் காமாக்ஷி மீனாக்ஷியுடன் சாதாரணமாகவே பழக ஆரம்பித்தாள். பிறகுதான் கொஞ்சங் கொஞ்சமாக நாட்டுப் பெண்ணை வைத்துக் கொள்ளும் விதத்தைப் பற்றி, மீனாக்ஷியிடம் தூபம் போட ஆரம்பித்தாள். இந்தத் தூபத்திற்கெல்லாம் மீனாக்ஷி முதலில் அசைந்து கொடுக்க வில்லை. ஆனால், கரைப் பார் கரைத்தால் கல்லும் கரையும் என்பது போல, வர வர மீனாக்ஷியும் அவள் சொற்களைக் கேட்டு அதன்படியே நடக்க ஆரம்பித்தாள்.

ஒரு நாள் காலை. சாவித்திரி வழக்கம்போல எழுந்து வருவதற்குப் பதிலாகச் சிறிது நேரம் கழித்து எழுந்து வந்தாள். பழைய மீனாக்ஷியாக இருந்தால் அவள் அப்படி நேரங்கழித்து எழுந்து வந்ததற்கு ஒன்றும் கூறியிருக்க மாட்டாள். ஆனால் அவள் இப்போது புதிய மீனாக்ஷி யல்லவா! அப்பொழுதுதான் எழுந்து வந்த சாவித்திரியைப் பார்த்து, "ஏண்டி! இப்படியா ஒருத்தி பொழுது விடிந்தது கூடத் தெரியாமல் தூங்குவாள்! இன்று வெள்ளிக் கிழமையல்லவா! எப்போது எண்ணெய் தேய்த்துக் கொள்ளுகிறது! இப்படித் தூங்கினால் வீடு உருப்பட்டாற் போலத்தான்" என்று கடுமையான சொற்களை வீசி எறிந்தாள். இவ்வார்த்தைகளைக் கேட்ட சாவித்திரிக்குத் தூக்கி வாரிப் போட்டது. தன் மாமியார் தானா அவ்வாறு சொல்வது என்று எண்ணி ஆச்சரியமடைந்தாள்.

"அம்மா, இன்று கொஞ்சம் 'நன்றாகத் தூங்கி விட்டேன். அதனால் பொழுது விடிந்ததுகூடத் தெரியவில்லை. நீங்கள்தான் கொஞ்சம் எழுப்பி விடக் கூடாதா! நாளையிலிருந்து சீக்கிரம் எழுந்து விடுகிறேன்" என்று கூறிக்



கொண்டே தோட்டத்தின் பக்கம் சென்று மன்றயப் பார்த்தாள் சாவித்திரி.

"ஏண்டி! உனக்கு வயது என்ன கொஞ்சமாவா ஆயிற்று! எருமைக் கடாவுக்கு ஆகிறது போல் ஆகவில்லையா! உன்னைப் போய் நான் எழுப்ப வேண்டுமா! நீ என்ன சின்ன பாப்பாவா உன்னை எழுப்புவதற்கு!" என்று மூணு மூணுத்தாள் மீனாக்ஷி. சாவித்திரி இதற்குப் பதிலே சொல்லவில்லை. நேற்றுவரை தன் மீது மிகுந்த பிரியமாயிருந்தத் தன் மாமியார், இன்று-அதுவும் வெள்ளிக்கிழமையில் எழுந்து வரும்போதே தன் மீது எரிந்து விழுவதற்குக் காரணம் தெரியாமல் விழித்தாள் சாவித்திரி.

அது அத்துடன் போயிற்று. சாவித்திரி எண்ணெய் தேய்த்துக் கொண்டாள். வழக்கம் போலத் தலையைக் கசக்கி, அலம்பி விடுவதற்கு மீனாக்ஷி வரவில்லை. காரணம் காமாக்ஷியின் துர்ப்போதனைதான். இது சாவித்திரிக்கு எப்படித் தெரியும்! ஆகவே, அவள் தன் மாமியாரை 'அம்மா, அம்மா' என்று இருமுறை கூப்பிட்டாள். பதிலே வரவில்லை. தன் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்த மூர்த்தியின் காதில் அக்குரல் விழவே, அவன், "அம்மா, சாவித்திரி உன்னைக் கூப்பிடுகிறாள்" என்றான்.

"ஆமாம்; அவளுக்கு என்ன வேலை! தலையைக் கசக்குவதற்கு என்னைக் கூப்பிடுகிறாளாக்கும். என்னால் முடியாது. எல்லாம் அவளே கசக்கிக் கொள்ளட்டும்" என்றாள் மீனாக்ஷி.

இந்தப் பதிலைக் கேட்ட மூர்த்தி திடுக்கிட்டான். எனினும் அதைப் பற்றித் தர்க்கிக்க அவனுக்கு நேரமில்லை. மணியோ ஒன்பதரை ஆகிவிட்டது. அவசரம் அவசரமாக ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது தலையை ஆற்றியபடியே அவ்விடம் வந்த சாவித்திரி மூர்த்தியைப் பார்த்து, "சாயங்காலம் வரும் போது ஞாபகமாகக் கொஞ்சம் பூ வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்றாள். மீனாக்ஷியும் எட்டிக்குப் போட்டியாக, "ஏண்டாப்பா! எனக்கும் கொஞ்சம் கற்பூரமும், ஊதுவத்தியும் மறந்துடாமே வாங்கிக் கொண்டு வருகிறாயா!" என்று கேட்டாள்.

மீனாக்ஷியின் செய்கை மூர்த்திக்கு ஆச்சரியத்தையும் திகைப்பையும் உண்டாக்கியது.

"சரி" என்று தலையை ஆட்டி விட்டு, ஆபீஸுக்குச் சென்றான். மாலை மூர்த்தி ஆபீஸிலிருந்து வீட்டுக்குத் திரும்பிய போது, காலையில் நடந்ததைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தானே தவிர, பூ வாங்குவதற்கோ, ஊதுவத்தி வாங்குவதற்கோ மறந்துவிட்டான்.

வீடும் வந்து விட்டது. அப்போது "பூ வேணுங்களா!" என்று ஒரு குரல் கேட்டது. பேசாமல் பூவை வாங்கிக் கொண்டு வீட்டை நோக்கி வந்தான். வீட்டுக்குள் நுழைந்த மூர்த்தி, வழக்கத்திற்கு மாறாக வீடு நிசப்தமாயிருப்பதைக் கவனித்தான். வீட்டுக்குள் நுழையும் போதே புன்னகையுடன் வரவேற்கும் சாவித்திரியையும் அன்று காணவில்லை. சாவித்திரி எங்கே! இக்கேள்வியை அவன் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான்.

மூர்த்தி ஆபீஸிலிருந்து வந்து ஒரு மணி நேரமாயிற்று. காப்பியையும், டிபனையும் எடுத்துக் கொண்டு வரும் சாவித்திரியைக் காணமற் போகவே, பொறுமையை இழந்தவனாய், "சாவித்திரி, சாவித்திரி" என்று ஆத்திரத்துடனேயே கூப்பிட்டான். சற்று நேரம் கழித்து, "நீங்கள் எப்போது ஆபீஸிலிருந்து வந்தீர்கள்!" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்த சாவித்திரி, தன் கையிலிருந்த காப்பி டம்ளரை மேஜைமேல் வைத்து விட்டு வெளியே போகத் திரும்பினாள்.

அவளை ஏறிட்டுப் பார்த்த மூர்த்தி, "சாவித்திரி, அழுதாயா, என்ன!" என்று கேட்டான்.

"இல்லையே, நான் எதற்காக அழ வேண்டும்! அது கிடக்கட்டும், பூ வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீர்களா!" என்று கேட்டுப் பேச்சை மாற்றினாள் சாவித்திரி.

பேசாமல் அவள் கையில் பூவைக் கொடுத்தான் மூர்த்தி. அதே சமயம் உள்ளே நுழைந்த மீனாக்ஷி, "ஏண்டா மூர்த்தி, ஊதுவத்தி வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாயா!" என்று கேட்டவுடன் திடுக்கிட்டுப் போனான் மூர்த்தி. "அம்மா, வாங்கிவர மறந்து போய்விட்டேன். இப்பொழுதே போய் வாங்கி வருகிறேன்" என்று சட்டையைப் போட்டுக் கொண்டு வெளியே போகக் கிளம்பினான்.

"ஏண்டா, அவள் சொன்னது போல்தானே நானும் சொன்னேன்! நான் சொன்னது

மட்டும் ஏன் மறந்துவிட்டது! என்னதான் இருந்தாலும் அவள் பெண்டாட்டியல்லவா! ஒரு வேளை அவள் வாங்கிவர வேண்டாமென்று சொல்லி விட்டாளோ, என்னமோ!" என்று பலவிதம் அடுக்கிக் கொண்டே சென்றாள் மீனாக்ஷியம்மாள்.

மூர்த்தி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். அதற்குமேல் அவனால் பொறுக்க முடியவில்லை. ஆயினும், தான் வாயைத் திறந்தால் பேச்சு இன்னும் அதிகரிக்குமே ஒழியக் குறையாது. அதனால் வாய் பேசாமல் வெளியே சென்று விட்டான்.

அன்று சாவித்திரி திடீரென்று மயக்க மடைந்து விழுந்துவிட்டாள். மூர்த்தி பதறிப் போய் விட்டான்.

"டேய் மூர்த்தி, இதற்குப் போய்ப் பயப் படுவார்களா! அவளுக்கு வேலை செய்ய இஷ்ட மில்லைபோல் இருக்கிறது. சொன்னால் எங்கே நான் கோபித்துக் கொள்வேனோ என்று இப்படிப் படுத்துக் கொண்டு விட்டாள். மயக்கமாவது, கியக்கமாவது! அதெல்லாம் வெறும் பாசாங்கு. இதற்குப் போய் டாக்டர் என்னத்திற்கு!" என்று இரைந்து கொண் டிருந்தாள் மீனாக்ஷி. மூர்த்தி பதறிப்போய் டாக்டரை அழைத்து வந்தான்.

டாக்டர் நோயாளிக்கு உடம்பு மிகவும் பல ஹீனமாக இருக்கிற தென்றும், அதனால் அவ ளுக்கு 'ரெஸ்ட்' வேண்டு மென்றும் சொல்லி விட்டுச் சென்றார். மூர்த்திக்கு மீனாக்ஷியின் வார்த்தைகளைக் கேட்கச் சகிக்கவில்லை. அவ ளோடு சண்டை போடவும் அவன் மனம் ஒப்ப வில்லை. இச் சமயம் சாவித்திரி மெதுவாகக் கண்களைத் திறந்தாள். தன் மாமியார் சொல் லிய வார்த்தைக ளெல்லாம் அவள் காதில் பழுக்கக் காய்ச்சிய ஈயத்தைப் போல் நுழைந் தன. அவள் இதயத்தை யாரோ கசக்கிப் பிழிவது போல் இருந்தது. மெள்ள எழுந் திருக்க முயன்றாள். முடியவில்லை. அதே சம யம் அவள் சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவத்தை நினைத்துப் பார்த்தாள்.

இதற்கு முன்பெல்லாம் மீனாக்ஷியும், சாவித் திரியும் மிகவும் மனமொத்துத்தானே வாழ்ந்து வந்தார்கள்! ஒரு நாள் சாவித்திரி இப்படித் தான் மயக்கமாய் விழுந்து விட்டாள். மூர்த் திக்கு மேல், மீனாக்ஷி துடி துடித்துப் போய் விட்டாள். மயக்கம் தெளிந்த பிற்பாடு கூட அவளை வேலை செய்ய விடவில்லை. அன்று பூராவும் சாவித்திரியைக் கவலையுடன் கவனித் துக் கொண்டதுடன், வீட்டு வேலை பூராவும் தானே செய்தாள் மீனாக்ஷி. சாவித்திரி ஏதா வது வேலை செய்யச் சென்றால்கூட அவளைக் கோபித்துப் படுக்க வைத்தாள். அப்படிப் பட்ட மீனாக்ஷியா இவள்! புது மீனாக்ஷியாக வல்லவா மாறியிருக்கிறாள்! இந்த எண்ணம் அவள் மனதில் தோன்றியதும், துக்கம் பிறிட் டுக் கொண்டு எழுந்தது. அவளையு மறியாமல் அவள் கண்களில் கண்ணீர் பெருகியது. மௌனமாக எழுந்து வேலைகளை யெல்லாம் கவனிக்கலானாள்.

நாட்கள் வெகு வேகமாக ஓடிக்கொண்டி ருந்தன. சாவித்திரிக்கு, மீனாக்ஷியிடமிருந்து படிக்கப் படும் குற்றச் சாட்டுகள், அதிகரித் தனவே தவிரக் குறையவில்லை. இந் நிலையில் சாவித்திரி கர்ப்பவதியானாள். வழக்கப்படி, வரிசைக் கிரமமாக, வளைகாப்பு, சீமந்தம் முத லியவைகள் நடந்தேறின. சாவித்திரியைப் பிர சவத்திற்குத் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்ல ராமச்சந்திரய்யர் வந்திருந்தார். மூர்த்தி சாவித் திரியை அவள் தகப்பனாருடன் செல்லும்படி வற்புறுத்தினான். ஆனால் சாவித்திரி பிறந்தகம் செல்ல மறுத்தாள். இச்சமயத்தில்தான் கதை யின் ஆரம்பத்தில் கூறிய சம்பாஷணை அவர்க ளிருவருக்கும் நடந்தது. கடைசியில் மூர்த்தி மீனாக்ஷி இவர்கள் வற்புறுத்தியதாலும், அவள் தந்தை வருந்திக் கூப்பிட்டதாலும், பிரசவத் திற்குப் பிறந்த வீட்டிற்குச் சென்றாள் சாவித்திரி.

* * *

"ஸார், தந்தி" என்ற குரலைக் கேட்டு வெளியே வந்து தந்தியைப் பிரித்தான் மூர்த்தி.

"சாவித்திரிக்கு அபாயம்—உடனே வரவும். ராமச்சந்திரன்" என்ற தந்தியைப் படித்ததும் சிறு குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுது கொண்டே உள்ளே சென்றான்.

"என்னடா, மூர்த்தி, என்ன சமாசாரம்! ஏன் அழுகிறாய்!" என்று கேட்ட மீனாக்ஷி

---

## நன்றாகத் தெரியும்!



"என்ன தைரியத்தில் இந்த வீட் டில் நுழைந்தீர்கள்? நான் யார் என்று தெரியுமா?"

"நீங்கள் தான் பிரபல அட்வகேட் சுந்தரலிங்கம். நாங்கள் ஒரு வேளை பிடிபட்டு விட்டால் கட்டாயம் உங்களையே எங்கள் வக்கீலாக வைத்துக் கொள்ளுகிறோம்!"

பிடத்தில் தந்தியை வீசி யெறிந்து விட்டு ஸ்டேஷனை நோக்கிச் சென்றான் மூர்த்தி.

தந்தியைப் படித்த மீனாக்ஷிக்கு முதலில் ஒன்றும் தோன்றவில்லை. பிறகுதான் படிப்படியாக, ஒன்றன்பின் ஒன்றாக எல்லாம் ஞாபகத்துக்கு வந்தது. மீனாக்ஷி சாவித்திரியை என்னதான் கொடுமைப் படுத்தினாலும், சாவித்திரி அவள் மாட்டுப் பெண்தானே! ஏதேதோ யோசித்துக் கொண்டிருந்த மீனாக்ஷி, திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல, ஒரு புடவையை எடுத்து வைத்துக் கொண்டு, ஸ்டேஷனை நோக்கி நடந்தாள். அவள் அதிர்ஷ்டம் அவள் ஸ்டேஷனில் அடி எடுத்து வைப்பதற்கும், ரயில் கிளம்புவதற்கும் சரியாக இருந்தது. விதி அவளை அடுத்த ரயிலில் செல்லும்படி செய்து விட்டது. ஆனால், அதுவும் அவளுக்கு நன்மையாகவே முடிந்தது.

* * *

சாவித்திரி ஓர் அழகிய ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். ஆனால், அதன் பிறகு அவள் கண் திறந்து குழந்தையைக்கூட ஏறெடுத்துப் பார்க்க முடியாதபடி அவளுக்கு ஜன்னி கண்டு விட்டது. பிரபல லேடி டாக்டர் நிர்மலா தேவி, அவள் அருகிலேயே இருந்து அவளைக் கண்காணித்து வந்தாள். மூர்த்தி, ராமச்சந்திரய்யர் முதலியவர்கள் கவலையுடன் அவள் அருகில் உட்கார்ந்திருந்தனர். வெகு நேரத்திற்குப் பிறகு சாவித்திரி சுய நினைவு வந்து கண் விழித்தாள். சுற்றிலும் இருந்தவர்களை ஒருமுறை கவனித்துப் பார்த்தாள். பிறகு, மெதுவாகத் தன் பார்வையை மூர்த்தி பக்கம் திருப்பி, மிக மெல்லிய குரலில், "அம்மா வரவில்லையா!" என்று கேட்டாள். அவள் குரலில் ஏமாற்றம் தொனித்தது. அதே சமயம் மீனாக்ஷி வந்ததையோ, உள்ளே புருஷர்கள் நிரம்பியிருப்பதைப் பார்த்து, வாசற்படி யருகிலேயே நின்றதையோ ஒருவரும் கவனிக்கவில்லை. மீனாக்ஷி அங்கு நின்றிருந்தாலும், உள்ளே பேசுவது எல்லாம் கணீரென்று அவள் காதில் விழுந்தது.

"அவ்வளவு கவலைக்கிடமான நிலையிலும், நீ ஏன் 'அம்மாவைப் பற்றிப் பேசுகிறாய்! அவளால்தானே உனக்கு உடம்பு இவ்வளவு மோசமாகி விட்டது. இல்லாவிட்டால் நீ இவ்வளவு கேவல ஸ்திதிக்கு வந்திருக்க மாட்டாயே!" என்று படபடக்கக் கூறினான் மூர்த்தி. அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. ஆத்திரத்தில் வார்த்தைகள் வெளிவர மறுத்தன. அம்மாவின்மேல் அவ்வளவு தூரம் வெறுப்பு ஏற்பட்டிருந்தது மூர்த்திக்கு.

சாவித்திரி குறுக்கிட்டு, "அம்மாவைப்பற்றி அப்படியெல்லாம் சொல்ல வேண்டாம் என்று உங்களுக்கு எத்தனை தடவை சொல்வது! அவர் அப்படியெல்லாம் செய்ததும் நன்மைக்குத்தான். தாயன்பு என்பதை அறியாமல் இருந்த என்னை அவர் எவ்வளவு அன்பாக நடத்தினார்! எல்லாம் என் போதாத வேளை. அதனால்தான் அவர் என்னிடம் அப்படி நடந்து கொண்டார். எப்பொழுதுமே அவர் அப்படியேயா இருப்பார்! எனக்கு மறுபடியும் நல்ல காலம் வந்தால் அவர் என்னிடம் முன்போலவே நடந்து கொள்ள மாட்டாரா!" என்று கூறித் தன் கண்ணில் வழியும் கண்ணீரை மறைக்கும் பொருட்டு, தன் தலையை மறுபக்கம் திருப்பிக் கொண்டாள்.

அதேசமயம் வாசற்படி யருகில் நின்று கொண்டிருந்த மீனாக்ஷியின் மனதில் பெரும் போராட்டம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. சாவித்திரி சொல்லிய வார்த்தைகளெல்லாம் அவள் காதில் கணீரென்று விழுந்தன. ஒரு காலத்தில்தான் சாவித்திரியிடம் வெகு பக்ஷமாயிருந்ததையும், பின், காமாக்ஷியின் வார்த்தையைக் கேட்டுச் சாவித்திரியைக் கொடுமைப் படுத்தியதையும் நினைத்துப் பார்த்தாள். தான் சாவித்திரியை எவ்வளவுதான் கொடுமைப் படுத்தினாலும், அவள் தன்னிடம் எவ்வளவு அன்போடும், மரியாதையோடும் நடந்து கொள்ளுகிறாள்! அவ்வளவு கவலைக்கிடமான தேக ஸ்திதியிலுங்கூடத் தன்னைப் பற்றி எவ்வளவு அக்கறையோடு விசாரிக்கிறாள்! அதுவுமல்லாமல், தன்னைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாமென்று மூர்த்தியைக் கூட அல்லவா கண்டிக்கிறாள்! இவ்வளவு அருமை மருமகளை, அன்பாக வைத்துக் கொள்ளாமல், அவளை எவ்வளவு கொடுமைப் படுத்தினாள்! இதையெல்லாம் நினைத்துக் கொண்ட மீனாக்ஷிக்கு, சாவித்திரியிடம் முன்பிருந்த பாசமெல்லாம் திரும்பி வந்து விட்டதுபோல் தோன்றியது. உள்ளே புருஷர்கள் இருப்பதைக்கூடக் கவனிக்காமல், ஆவலோடு, 'சாவித்திரி' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே சென்றாள்.

"அம்மா, உட்காருங்கள். இப்பொழுதுதான் வருகிறீர்களா!" என்று வினவினாள் சாவித்திரி. அன்றையிலிருந்து சாவித்திரிக்கு யோகம் அடிக்கத் தொடங்கியது. சாவித்திரிக்கு வேண்டிய எல்லாப் பணிவிடைகளையும் மீனாக்ஷியே செய்யத் தொடங்கினாள். சாவித்திரிக்கு அவள் தாய் இருந்தால், எப்படி ஒரு குறையும் இல்லாமல் செய்வாளோ, அப்படியே செய்தாள் மீனாக்ஷி. சாவித்திரி கூட வேடிக்கையாக, "அம்மா, நான் படுக்கையிலிருந்து எழுந்தவுடன் நீங்கள் படுத்து விடப் போகிறீர்கள்" என்று அடிக்கடி சொல்வாள். மீனாக்ஷியின் மனமாற்றத்திற்குக் காரணம் தெரியாமல் விழித்தனர், மூர்த்தியும், சாவித்திரியும்.

ஆறு மாதங்களுக்குப் பின் ஒரு நாள்.

"சாவித்திரி, சாவித்திரி! அங்கே என்ன வேலை செய்கிறாய்! குழந்தை அழுகிறான் பார். நான் அந்த வேலையைச் செய்கிறேன். நீ வந்து குழந்தையைப் பார்த்துக் கொள்" என்று இரைந்து கொண்டிருந்தாள் மீனாக்ஷி அம்மாள்.

"இதோ வந்து விட்டேன், அம்மா!" என்று கூறிக் கொண்டே வந்தாள் சாவித்திரி. மீனாக்ஷி அவள் விட்ட வேலையைக் கவனிக்கப் பின் கட்டுக்குச் சென்றாள்.

"ரவி, நீ அதிர்ஷ்டசாலிடா! உன்னால்தான் உன் பாட்டிக்கும் மனமாற்றம் ஏற்பட்டது. என் கலியும் தீர்ந்தது" என்று கூறிக் கொண்டே குழந்தையை வாரி அணைத்துக் கொண்டாள் சாவித்திரி. குழந்தை ரவியும் அதை ஆமோதிப்பவன் போல் தன் பொக்கை வாயைத் திறந்து, அழகாகச் சிரித்தான்.

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

★ ★ ★

- இருபத்தோரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினேரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த அகில உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1950-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பும் கதைகள் சொந்தக் கற்பனையென்று கதை ஆசிரியரின் உறுதி மொழி சேர்க்கப்படவேண்டும்.
- கதையின் விஷயம் எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், துரோகம், கலியாணம், மரணம்,— ஆகிய எந்த விஷயமானாலும் சரி; உணர்ச்சிப்பெருக்கு, அமைப்புத்திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம், — ஆகிய சிறுகதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- ஒரே ஆசிரியர் போட்டிக்கு இரண்டு கதைகள் அனுப்பலாம்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:—ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றில் சிறந்த நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நாலு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களேயோ, பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தரவேண்டும்.
- பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப்பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.




சிங்கப்பூர் துறைமுகத்துக்கு வெளியே இருக்கும் ராபிள்ஸ் - கலங்கரை விளக்கு

● ● ● ஐந்நூறு ஏழைச் செம்படவர்களுக்கு மேல் இராத சிறிய கிராமமாக இருந்த சிங்கப்பூர் இன்று உலகத்திலுள்ள பெரிய நகரங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது. கடற்படைக் கோட்டை என்றும் கிழக்கு ஆசியாவின் வாசற்படி என்றும் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

“யுத்த கேந்திர”த் தொடரில் இதற்கு முன் ஆஸ்திரேலியா, இந்தோனேஷ்யா, பர்மா, கோரியா நாடுகளைப் பற்றி விவரிக்கப்பட்டது.

சிங்கப்பூர் துறைமுகத்தினால் சிறப்பை யடைந்த மலாய் நாட்டைப் பற்றிய மற்ற விவரங்களை இந்தக் கட்டுரையில் காணலாம். ● ● ●

## மலேயா (தொடர்ச்சி)

இரண்டாவது மகா யுத்தத்தில் ஜப்பானியர் தோல்வியடைந்து மறுபடியும் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட்டது அல்லவா? அப்போது பிரிட்டிஷார் மலேயாவில் மீண்டும் பிரவேசித்த உடனே முதன் முதலாகச் செய்த காரியங்களில், சிங்கப்பூரில் அமைக்கப்பட்டிருந்த ஐ. என். ஏ. (நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் நிறுவிய இந்திய தேசிய ராணுவம்) வீரர்களின் ஞாபகச் சின்னத்தைத் தகர்த்ததும் ஒன்று என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட வேண்டும். அத்தகைய ஞாபகச் சின்னங்களைத் தகர்ப்பதன் மூலம் தங்களுடைய தோல்விகளையும் பிறருடைய பெருமையையும் மறைத்து விடலாம் என்பது பிரிட்டிஷாரின் எண்ணம் போலும்!

ஐரோப்பாவில் போர்ச்சுகீசியர்களின் செல்வாக்கு ஓங்க ஆரம்பித்ததும் அவர்கள் ஆசியாவிலும் தங்களுடைய செல்வாக்கைப் பரப்ப முற்பட்டனர். ஆசியாவில் தங்களுடைய வலையை வீசிக் கொண்டு வந்த போர்ச்சுகீசியர்கள் 1511-ம் வருஷம் மலாக்காவில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நிறுத்தினர். நூற்றுமுப்பது ஆண்டுகள் வரையில் அவர்கள் மலாக்காவில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். அதன் பின்னர் அவர்களிடமிருந்து டச்சுக் காரர்கள் மலாக்காவைக் கைப்பற்றினார்கள். அதிலிருந்து நூறு வருஷங்களுக்கு மேல் மலேயாவில் டச்சுக்காரர்களின் ஆதிக்கம் இருந்து வந்தது. பிறகு 1786-ம் ஆண்டிலிருந்து அந்த நாட்டில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்படத் தொடங்கியது. அதிலிருந்து அவர்கள் நயமாகவும் பயமுறுத்தியும் சுல்தான்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு மலாய் நாடு முழுவதும் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டார்கள். அவ்வாறாக பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மண்டலத்துக்குள் மலாய் நாடும் சிக்கியது.

★

மலாய் நாட்டின் விஸ்தீரணம் சென்னை மாகாணத்தில் மூன்றில் ஒரு மடங்குதான் இருக்கிறது. அவ்வளவு சிறியதாக இருந்தும் அது உலகத்தின் கேந்திர ஸ்தானங்களில் ஒன்றாக விளங்குவதற்குக் காரணம் சிங்கப்பூர் துறைமுகமும், ரப்பர் ஈய உற்பத்தியும்தான்.

சிங்கப்பூர் உலகத்திலுள்ள பிரம்மாண்டமான துறைமுகங்களில் ஏழாவது ஸ்தானம் வகிக்கிறது. வல்லரசுகள் உள்பட உலக நாடுகளிடம் இருக்கும் கடற்படைகள் எல்லாம் சிங்கப்பூர் துறைமுகத்தில் அடங்கிவிடும் என்றால் மேற்படி துறைமுகம் எவ்வளவு பெரியது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்!

ராபின்ஸ் ஆக்ரமித்த போது ஐந்நூறு ஜனங்கள் கூட இராத மிகச் சிறிய கிராமமாக இருந்த சிங்கப்பூர் இன்று சுமார் பதினைந்து லட்சம் ஜனங்கள் வசிக்கும் பிரம்மாண்ட நகரமாகத் திகழ்கிறது. படைத் தளமாகவும் கீழ்த்திசையின் வாசற்படியாகவும் விளங்குகிறது. கிழக்குத் திசையிலுள்ள நாடுகளுக்கெல்லாம் செல்லும் கப்பல்கள் பெரும்பாலும் சிங்கப்பூர் வழியாகத்தான் செல்லவேண்டும். தென்கிழக்கு ஆசியாவில் ஹிந்துக்களின் சாம்ராஜ்யம் உன்னத நிலையில் இருந்த போது வழங்கப்பட்ட பெயரே சிங்கப்பூர் அல்லது சிங்க நகரம் என்று சரித்திராசிரியர்கள் ஆதாரங்களுடன் கூறுகிறார்கள்.

சிங்கப்பூர் தீவு இருநூற்று இருபது சதுர மைல்கள் விஸ்தீரணம் உள்ளது. அதற்கும் மலாய் நாட்டுக்கும் இடையேயுள்ள ஜோகூர் ஜலசந்தி சுமார் முக்கால் மைல் தூரமே இருப்பதால், அங்கு கடவில் ரயில் பாலமும் இதர வண்டிகளின் போக்கு வரவுக்காக ரஸ்தாவும் போட்டிருக்கிறார்கள்.

முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் பிரிட்டிஷார் சிங்கப்பூரை மிகவும் சக்தி பொருந்திய கடற் படைத் தளமாக நிர்மாணித்தார்கள். அங்கு கடலை நோக்கிப் பெரிய பீரங்கிகள் அமைக்கப்பட்டன. காடுகளை அழித்து விமான நிலையங்களை நிர்மாணித்தார்கள். எதிரிகளின் நீர்மூழ்கிகள் வர முடியாமல் துறைமுகத் துவாரத்தில் வலைகள் போடப்பட்டன. நாலாபுறத்திலும் ஏராளமான கடற் கண்ணிகள் இரகசியமாக வைக்கப்பட்டன.

உலகத்தின் சரித்திரம் ஒரு காலத்தில் மலாய் நாட்டினால் நிர்ணயிக்கப்படும் என்று ஒரு பிரபல பிரிட்டிஷ் தளபதி சென்ற மகா யுத்தத்துக்கு முன் பெருமையடித்துக் கொண்டார். சிங்கப்பூர் நாலுபுறமும் கடலால் சூழப்பட்ட இரும்புக் கோட்டை என்று பிரிட்டிஷ் சர்க்காரும் ஜப்பானைப் பயமுறுத்தி வந்தனர்.

சிங்கப்பூர் கடற்படைத் தளத்தைப் பிரிட்டிஷார் அவ்வளவு சக்தி பொருந்தியதாகச் செய்திருந்தும் கூட, ஜப்பானியர்கள் எதிர்பாராத விதமாகக் கடலில் எங்கேயோ ஒரு மூலையில் துருப்புகளை இறக்கி மலேயா மீது படையெடுத்து வந்ததால் பிரிட்டிஷாரின் முன்னேற்பாடுகள் எல்லாம் வியர்த்தமாயின. எந்த வல்லரசும் கடல் வழியாகத்தான் சிங்கப்பூரைத் தாக்கும் என்ற எண்ணத்துடன் பிரிட்டிஷார் தயாரித்திருந்த தற்காப்புத் திட்டமெல்லாம் ஜப்பானியரின் துணிச்சலினாலும் யுத்த தந்திரத்தினாலும் திறமையினாலும் தவிடு பொடியாயின!

சிங்கப்பூரை ஒரு சர்வதேச நகரம் என்று சொல்லலாம். அங்கு தெருக்களில் சீனர்கள், இந்தியர்கள், மலாய்க்காரர்கள், ஐரோப்பியர்கள் முதலிய பல தேசத்தினரும் நடமாடிய வண்ணமாக இருப்பார்கள். கப்பல் போக்குவரத்திலும், வியாபாரத்திலும் சிங்கப்பூர் சர்வ தேச முக்கியத்துவம் பெற்று விளங்குவதைப் போல, கிழக்குத் திசையின் வாசற்படி என்ற முறையில் தென் கிழக்கு ஆசியாவின் அரசியலிலும் கேந்திர ஸ்தானமாக விளங்கி வருகிறது. அது மாத்திரமல்ல;



இந்திய மகா சமுத்திரமும் பசிபிக் மகா சமுத்திரமும் சந்திக்கும் முக்கியப் பிரதேசமாகவும் விளங்கி வருகிறது.

சிங்கப்பூர் பிரபலமடைவதற்கு முன் மலேயாவில் மலாக்காவும் பினங்கும்தான் முக்கியத் துறைமுகங்களாக இருந்தன. ஒரு காலத்திலே வர்த்தகப் போக்குவரத்தில் ஆசியாவிலேயே இந்தியாவுக்கு அடுத்தபடியாக மலாக்கா விளங்கியது. ஆனால் சிங்கப்பூர் துறைமுகம் அபிவிருத்தி அடைந்தபின் மலாக்காவும் பினங்கும் செல்வாக்கு குன்றி இரண்டாவது மூன்றாவது ஸ்தானங்களை அடைய நேர்ந்தது.



மலாய்ப் பெண்மணி

★

உருவத்திலே ஆசியாக் கண்டத்துக்கு வால் போலிருக்கும் மலாய் நாடு சுமார் எழுநூற்றைம்பது மைல் நீளமும் இருநூறு மைல் அகலமும் இருக்கிறது.

மலேயாவில் உள்ள ஓர் அதிசயம் என்னவெனில், அந்த நாட்டிலுள்ள ஜனங்களில் தொண்ணூற்றேழு சதவிகிதம் பேர் அங்கு குடியேறியவர்களே! மலேயா காடுகளில் வாழும் காட்டுமிராண்டிகளைத் தவிர மற்றவர்கள் யாவரும் அங்கு குடியேறியவர்கள்தான். மலேயாவைத் தங்களுடைய நாடு என்று சொல்லிக் கொள்ளும் மலாய்க்காரர்கள்கூட ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் செல்வாக்குடன் விளங்கிய காலத்தில் இந்தோனேஷ்யாவிலிருந்து அங்கு குடியேறியவர்கள்தான் என்று சரித்திரம் கூறுகிறது. சீனர்களும் இந்தியர்களும் குடியேறுவதற்குமுன் தாங்கள் அந்த நாட்டில் குடியேறிய காரணத்தினால்தான் மலாய்க்காரர்கள் மலேயாவைத் தங்கள் நாடு என்று சொல்லுகிறார்கள்.

மலேயாவிலே மற்றொரு விசித்திர நிலைமை என்னவென்றால், மலாய்க்காரர்கள் சிறுபான்மையோராக இருப்பதுதான்! அதாவது அங்குள்ள ஜனங்களில் சீனர்களும் இந்தியர்களுமாக அறுபது சதவிகிதமும் மலாய்க்காரர்கள் நாற்பது சதவிகிதமும் இருக்கிறார்கள். எனவே, ஜனநாயக முறையை அடிப்படையாகக் கொண்டு அங்கு பார்லிமெண்டு ஏற்படும் காலம் வருமாயின், அப்போது மலாய்க்காரர்கள் தங்கள் சொந்த நாட்டில் சிறுபான்மையோராகவே இருக்கும்படி நேரும்!

மலாய்க்காரர்கள் ஆதியில் ஹிந்துக்களாகவும் பௌத்தர்களாகவும் இருந்தார்கள். சுமார் ஐந்நூற்றாண்டுகளுக்கு முன் அந்தப் பிரதேசங்களில் அராபிய வர்த்தகர்களின் ஆதிக்கம் ஏற்பட்டபோது அவர்களால் மலாய்க்காரர்கள் மதம் மாற்றப்பட்டு முஸ்லிம்கள் ஆனார்கள்.

★

மலேயாவில் 1887-ம் வருஷம்வரையில் கரும்பு விவசாயம்தான் முக்கியமான தொழிலாக இருந்தது. அந்த நாட்டில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்படுவதற்கு முன்பே அவர்கள் இந்தியாவைக் கைப்பற்றி விட்டதால் மிகமிகக் குறைந்த சம்பளத்தில் அவர்கள் இந்தியாவிலிருந்து தொழிலாளர்களைக் கொண்டு போவது சாத்தியமாயிற்று. பத்தொன்பதாவது நூற்றாண்டின் இறுதிவரையில் மலேயாவில் கரும்பும் காப்பியும் முக்கிய விவசாயத் தொழிலாக இருந்தன. 1900 ஆண்டு ஆரம்பமானதிலிருந்துதான் அந்த நாட்டில் ரப்பர் உற்பத்தியும் ஆரம்பமாயிற்று. அதிலிருந்துதான் தமிழ் நாட்டிலிருந்து லட்சக்கணக்கான தொழிலாளர்கள் கடல் கடந்து மலேயாவுக்குச் செல்லத் தொடங்கினார்கள்.

மலேயாவில் உள்ள எட்டு லட்சம் இந்தியர்களில் மூன்றில் ஒரு மடங்கு பேர் அந்த நாட்டிலேயே பிறந்து வளர்ந்தவர்கள். அவர்களில் பெரும்பாலோர் இந்தியாவைப் பார்த்ததே கிடையாது!

அங்குள்ள லட்சக்கணக்கான தமிழ்த் தொழிலாளர்களில் மூன்றில் ஒரு மடங்கு பேர் ரப்பர் தோட்டங்களிலும் மற்றவர்கள் ரயில்வேக்களிலும் மராமத்து வேலைகளிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். அதாவது மலேயாவின் செல்வக் களஞ்சியமான ரப்பர் தோட்டங்களை உருவாக்கியவர்கள் தமிழர்களே; ரயில்வேக்களை நிர்மாணித்தவர்கள் தமிழர்களே; ரஸ்தாக்களை அமைத்தவர்கள் தமிழர்களே. எனவே மலாய் நாட்டிலுள்ள எல்லா சமூகத்தினரும் தமிழர்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று கூறுவது மிகையாகாது. தமிழர்களின் நீண்டகால உழைப்பே மலாய் நாட்டைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் விலையிலாப் பொக்கிஷமாகச் செய்திருக்கிறது.

# வட்ட மேஜை

## அரிசி விஷயம் - 1

இந்தியாவில் எத்தனையோ லக்ஷம் கிராமங்கள் இருப்பதாகச் சொல்கிறார்கள். கிராமங்களில் வாழும் குடியானவர்களும் நிலச்சுவான்தார்களுமே பெரும்பாலும் உணவு உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிறார்கள். கிராமங்களில் உற்பத்தியாகும் தான்யங்களைக் கொள்முதல் செய்து 'ஸ்டாச்சுவல் ஏரியா' என்று சொல்லப்படும் நகரங்களுக்கும் நெல், கோதுமை விளையாத பிரதேசங்களுக்கும் அனுப்பிவிடுகிறார்கள். கிராமங்களில் விவசாயத்தில் ஈடுபடாத மக்களுக்குக் கூப்பன் கொடுக்கிறார்கள். விவசாயத்தில் ஈடுபட்டு உழைக்கும் குடியானவர்களுக்கும் நெல் வரும்படி காணாத நாட்களுக்கு B கூப்பன் கொடுக்கிறார்கள். இந்தக் கூப்பன்களுக்கு நெல்லோ, ரவையோ கொடுப்பதற்கு ஒரு ரேஷன் கடை, கணக்கு வழக்கு ஆகிய எல்லாம் நகரத்தில் இருப்பது போலத்தான்.

ஆனால் என்ன கஷ்டப்பட்டாலும் எங்கிருந்து வந்தாலும் நகரத்தில் உள்ள கார்டுகாரர்களுக்குக் குறிப்பிட்ட ஏழு அவுன்ஸ் சாப்பாடு கிடைக்கும். உணவு தான்யம் உற்பத்தியாகும் கிராமங்களில் வாழும் மக்களுக்கு மூன்று அவுன்ஸோ அதற்கும் குறைவாகவோ கிடைக்கும்; ஒன்றுமே இல்லாத வாரங்களும் உண்டு. "ஏனய்யா இப்படி!" என்று கேட்டால் (1) நகரத்தில் வாழும் மக்கள் அதிகப்படியாக அரிசி வைத்திருந்தால் அவர்களைப் பிராஸிகூஷன் செய்து விடலாம். (2) நகரத்திலே வாழும் மக்கள் ஆபீஸ், தொழிற்சாலை முதலான இடங்களில் வேலை செய்பவர்கள்; வெளியில் போய் உணவுப்பொருள் தேடிக் கொள்ள வசதியற்றவர்கள் — என்று பதில் கிடைக்கிறது. வெளியில் உணவு தேடிக்கொள்கிறவர்கள் என்றால் கறுப்பு மார்க்கட்டில் வாங்கிக் கொள்கிறவர்கள் என்று அர்த்தம். கிராமத்திலே வாழும் குடியானவன் தான் உழைத்து உற்பத்தி செய்து சம்பாதித்த நெல்லைக் கண்ட்ரோல் விலையாகிய முப்பது ரூபாய்க்கு அளந்துவிட்டு வெளியில் எழுபது ரூபாய்க்கு வாங்கிக்கொள்ள வேண்டும்; அல்லது வாய்க்கால் தண்ணீரைக் குடித்து விட்டுப் படுக்கவேண்டும். நியாயம் எப்படியிருக்கிறது!

பத்து சதவிகிதம்தான் உணவுப் பற்றாக்குறை அதனால்தான் கண்ட்ரோல் அவசியமாகிறது என்கிறார்கள். பற்றாக்குறையைச் சிருஷ்டிப்பதே சர்க்கார்தான். நதியும் கால்வாய் வசதியும் உள்ள இடங்களில் நெல் பயிர் செய்வார்கள். புன்செய்ப் பிரதேசங்களில் வாழும் மக்கள் கிணற்று இறவைகளில் தங்கள் தேவைகளுக்குக் கேப்பையும் நெல்லையும் பயிர் செய்துகொண்டு, பாக்கி இடங்களில் வர்த்தகப் பயிர்கள் (வர்த்தகப் பயிர்கள் பருத்தி. மிளகாய், புகையிலை) செய்வார்கள். கொள்முதல் கெடுபிடி வந்த பின்பு எல்லோருமே வர்த்தகப் பயிர்கள் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அதோடு அவர்களுக்கு ரேஷன் கடையும் கூப்பனும் கிடைக்கும்போது தங்கள் பொறுப்பை உணர வேண்டிய அவசியமில்லாமல் ஆகிவிட்டது.

ரேஷன் கடையில் விநியோகம் நின்று விட்டால் சர்க்காரைத் திட்ட ஆரம்பித்து விடுகிறார்கள். அதுவுமல்லாமல் நன்செய்களிலும் நெல் பயிரை விட வாழைப்பயிர் சங்கடமில்லாமலும் லாபகரமாகவும் இருக்கவே நெல் உற்பத்தி குறைந்து வருகிறது. ஒரு பக்கம் ஏற்கனவே விளைந்து செழிப்பாக வர வேண்டிய நெல் பிரதேசம் குறையவும், மற்றொரு பக்கம் நெல் உபயோகியாமல் கேப்பை, வரகு இவைகளைச் சாப்பிட்டு வந்த புன்செய் பிரதேசங்களில் வாழும் மக்களுக்கு நெல் விநியோகிக்கவும் இந்தக் கண்ட்ரோல் முறை வழி செய்து விடுகிறது. அதனால்தான் உணவுக் கஷ்டம் ஏற்படுகிறதே யொழிய உண்மையில் பற்றாக்குறை அல்ல.

ரெவின்யூ அதிகாரிகள் ஜனங்களோடு தொடர்பு கொண்டுள்ளார்கள். ஜனங்களின் நிலைமை உண்மையில் உணரக் கூடிய சக்தி அவர்களுக்குண்டு. எதற்கெடுத்தாலும் பட்டாமணியத்தோடு கிராமத்தாரிடம் சென்று பழகுவதில் அவர்களுக்கு ஒரு பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருக்க இந்த நெல் கொள்முதல்விஷயத்தில் அவர்களுக்குக் கெட்டபெயர் வரக் காரணம் என்ன! ஜனங்களும் அவர்களை நக்ஷத்திரகனோடு ஒப்பிடுகிறார்கள். மேல் அதிகாரிகளும் கொள்முதல் பிரயோஜனமில்லை என்று 'டோஸ்' கொடுக்கிறார்கள். இது ஏன்! யுத்தத்திற்குப்பின் இயற்கையாகவே மனித சமுதாயத்தில் நாணயம் குறைந்து போனதோடு இந்தக் கண்ட்ரோல் சனியனும் ஜனங்களின் பண்பை மிகவும் கேவலமாகச் செய்துவிட்டதுதான் காரணம். ஒரு அதிகாரி நேர்மையாகக் கண்டிப்போடு நெல் கொள்முதல் வேலையை நடத்தினால் அவரைப் பற்றி மொட்டை மனுக்கள் ஆயிரக்கணக்கில் சர்க்காரிடம் வந்து குவிகின்றன.

அதன் மூலம் அந்த அதிகாரிக்கு வேலை போய் விடுகிறது. இதைப் பார்த்து மற்ற அதிகாரிகள் நமக்கென்ன என்று அலக்ஷியமாகப் போய் விடுகிறார்கள். ஒரு சில அதிகாரிகளின் பண ஆசைக்கும் இது ஹேதுவாகி விடுகிறது. மொத்தத்தில் அதிகார யந்திரம் கெட்டு விடுகிறது. அதோடு கண்ட்ரோல் லட்சியம் சிதைந்து விடுகிறது.

"அதிகாரிகள் உத்தமர்களாக ஆக வேண்டும், ஜனங்கள் தருமர்களாக நடக்க வேண்டும். மக்கள் காய் கனிகளைச் சாப்பிட வேண்டும்" என்று மந்திரிகள் பிரசங்கம் செய்யவும், மந்திரிக்கு அழகு மாலை தாங்குதல், கலெக்டரிடம் அழகு காரில் போதல் என்று பொது ஜனங்கள் ஆத்திச்சூடி படிப்பதிலும் தேசம் குட்டிச் சுவராகி விடக் கூடாது. எல்லோருமாகச் சேர்ந்து ஒரு பெரும் பிரயத்தனம் எடுத்து இந்தக் கண்ட்ரோல் சனியனை ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டும்.

விட்டபைரம்
1-8-50 வி. எஸ். வெங்கடாச்சாரி

## அரிசி விஷயம் - 2

இன்று நம் நாட்டில் அதிலும் தென் இந்தியாவில் அநேக கிராமங்களில் லட்சக் கணக்கான ஏழை ஜனங்கள் உணவுப் பஞ்சத்தால் கஷ்டப் படுவதை ஒருவரும் இல்லையென மாட்டார்கள். பஞ்சம் என்றால் கொஞ்சம் நஞ்சமல்ல. வாரக் கணக்காக அரிசியைப் பார்த்தது கூட இல்லை என்று சொல்லும் நிலை ஏற்பட்டு விட்டது. அரிசி கிடைக்கா விட்டால் போகட்டும். கேழ்வரகு, கம்பு, சோளம், தினை ஆகிய தானியங்களாவது உண்டா! கோதுமை சாப்பிடுங்கள் என்று வாயால் மட்டும் சொன்னால் போதுமா! எங்கே கோதுமை! அநேக ரேஷன் கடைகளில் வாரத்திற்கு இரண்டு நாளைய ரேஷன் கூடத் தருவதில்லை. சில பேர் கடையை மூடிவிட்டுப் போய் விட்டார்கள்.

செங்கற்பட்டுத் தாலூகா பதின்மூன்றும் நெம்பர் ரேஷன் ஷாப்பைச் சேர்ந்த காட்டுப் பாக்கம், திண்ணைக் கரை, காட்டாங் குளத்தூர், வெள்ளாஞ்சேரி, பொத்தேரி, தைலாவரம் ஆகிய கிராமங்களுக்கு மாதம் 160 மூட்டை உணவு தானியங்கள் வந்து கொண்டிருந்தன. ஏப்ரல் மாதத்திலும் கூட 150 மூட்டை பங்கீடு செய்தார்கள்.

ஆனால் மே மாதத்தில் 110 மூட்டைகளும் ஜூன் மாதத்தில் 69 மூட்டைகளும் ஜூலை மாதத்தில் 60 மூட்டைகளுமே அனுப்பப் பட்டன. இப்படி சுமார் மூன்றிலொரு பங்கு மாத்திரமே கொடுத்தால் ஏழை ஜனங்கள் என்ன செய்வார்கள்! பின்னைக்கு, புளியங் கொட்டை, மரவள்ளிக் கிழங்கு, பனங்கிழங்கு, கீரை, புல், பூண்டுகளைப் புசித்துப் பிராணனை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்வளவு உணவு நெருக்கடி ஏற்பட்டிருக்கும் சர்க்கார், "நிலைமை அவ்வளவு மோசமாக இல்லை, சமாளித்து விடலாம், போதுமான கோதுமையிருக்கிறது, உணவுப் பொருள்கள் ஏழு சதம் தான் குறைவு" என்று ஓயாமல் சொல்லிக் கொண்டே வருவது பொறுப்பற்ற, உணர்ச்சியற்ற, குருட்டுவாதம் என்றே சொல்ல வேண்டும். எத்தனை நாள்தான் ஜனங்களை இப்படி ஏமாற்ற முடியும்!

இனி நாம் உணவுப் பொருள்களுக்காக மத்திய சர்க்காரை நம்பியிருந்தால் மோசம் போக வேண்டியதுதான். நாம் என்ன அவ்வளவு சக்தியற்றவர்களாக ஆகிவிட்டோமா! காந்தி மகானையும் அவர் காட்டிய உண்மை வழிகளையும், தன் கையே தனக்கு உதவி என்பதையும் மறந்து விட்டதனால்தான் இன்று இந்தக் கதி நமக்கு ஏற்பட்டிருக்கிறது. சென்னை சர்க்கார் இனித் தாமதிப்பதில் பிரயோஜனமில்லை. பொறுப்பை ஏற்றே ஆகவேண்டும்; சண்டைக்குப் படை திரட்டுவது போல உணவுப் பெருக்குப் படை ஒன்றைத் தயாரிக்க வேண்டும்; கிராம வாசிகள், நகரவாசிகள், மாணவர்கள், மாணவிகள், சிறுவர்கள், சிறுமிகள் முக்கியமாக மாஜி சிப்பாய்கள் எல்லோரையும் ஒன்று கூட்டி உற்சாகமூட்டிச் சுலபமாக, சீக்கிரமாக, புத்திசாலித்தனமாக உணவுப் பொருள்கள் உற்பத்தி செய்வதற்கு வேண்டிய வசதிகளை ஏற்படுத்தினால் நமக்குத் தேவையான எல்லா உணவுப்பொருள்களையும் நாமே, அடுத்த வருஷமென்ன இவ் வருஷத்திற்குள்ளேயே, கண்டிப்பாகத் தயாரித்து விடலாம்.

மனிதனால் சாதிக்க முடியாத காரியம் இன்று ஒன்றுமேயில்லை. ஜனங்கள் படும் கஷ்டம், உண்மை நிலவரம், சர்க்கார் மனதில் சரியாகப் படாமல் இருப்பதுதான் இவ்வளவு உணவுக் குறை பாட்டிற்குக் காரணம். சர்க்கார் வேண்டுமானால் எதைத்தான் சாதிக்க முடியாது. கிராம வாசிகளுக்கு வேண்டிய வசதிகளை உரம், விதை, உழுவதற்கு ட்ராக்டர்கள், மாடுகள், வேலை செய்பவர்களுக்குக் கூலி, தண்ணீர் சப்ளைக்குக் கிணறுகள், என்ஜின்கள் இவைகளை உடனடியாகக் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்து விட்டால் உணவுப் பஞ்சம் தானே பறந்து போய்விடும். உணவு தானியங்களை அதிகமாக உற்பத்தி செய்யாமல் இருப்பதை வைத்துக் கொண்டே சமாளித்து விடலாம் என்று நினைப்பது மூழு முட்டாள்தனம். இப்பொழுது ஜனங்களைப் பட்டினியிலிருந்து காப்பாற்றுவதற்கு எங்கிருந்தாலும் சரி, உணவுப் பொருள்களைச் சேகரித்து அவர்களுக்கு உடனே கொடுத்தாக வேண்டும். பிறகு அவர்களை உணவு உற்பத்தியில் ஈடுபடச் செய்யவேண்டும். அவசியமானால் கட்டாய வேலை செய்யவும் சட்டம் ஒன்றை ஏற்படுத்த வேண்டும்.

சென்னை
4—8—50 ஸ்ரீபாத சங்கர்



காப்பி சாப்பிட வந்தவர்:— என்னப்பா, சர்வர்! காப்பியில் ஈ விழுந்திருக்கிறதே!

நாயர்:— நான் சர்வர் இல்லை, ஸார்! மேஜை க்ளீன் பண்ணுகிறவன்!

வந்தவர்:— அது சரி, காப்பியில் ஈ விழுந்து இருக்கிறதே!

நாயர்:— அது காப்பி இல்லை, ஸார்! டீ!

வந்தவர்:— சரி, இதில் ஈ விழுந்து இருக்கிறதே!

நாயர்:— அது ஈ இல்லை, எறும்பு!

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "அரிசி விஷயம்" என்ற கடிதங்கள் எழுதிய விட்டலபுரம் ஸ்ரீ வி. எஸ். வெங்கடாச்சாரிக்கும், சென்னை ஸ்ரீபாத சங்கருக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

## துவேஷம் வேண்டாம் !

நான் சென்ற வாரக் "கல்கி"யில் வெளியாகி யிருந்த கொரியா சம்பந்தமான கடிதம் ஒன்றைப் படித்தேன்.

அக் கடிதம் எழுதிய அன்பர் கொரியா ஆக்கிரமிப்பில் அமெரிக்காவே குற்றவாளி என்றும், ரஷ்யா ஒன்றுமே அறியாதது என்றும் உறுதி கூறியிருக்கிறார். அவருக்குத் தெரியும் நேரு சர்க்காரின் நடுத்தரக் கொள்கையும், தீர்க்க தரிசனமும். ஐ. நா. வின் பாதுகாப்புக் கௌன்ஸிலின் தீர்மானத்திற்கு இந்தியா உடனே இணங்கிவிட வில்லை. சண்டையைத் துவக்கியது தென் கொரியாவா, அல்லது வட கொரியாவா என்று தீர்க்கமாக ஆலோசித்த பிறகே ஐ. நா. வின் தீர்மானத்தை ஆதரித்தது. சந்தேகமற வட கொரியாவே குற்றவாளி என்று நேருவே இரண்டு மூன்று தரம் அழுத்தம் திருத்தமாய்க் கூறி யிருக்கிறார். மேலும் இரண்டு நாட்கள் முன்பாக ஐ.நா. கௌன்ஸில் விவாதத்தில் ஸ்ரீ பி. என். ராவ் அவர்கள் இந்தியா இப்பவும் கூட வட கொரியாதான் குற்றவாளி என்று கருதுகின்றது என்றும், வட கொரியர்கள் 38 வது அக்ஷரேகைக்குப் பின் வாங்க வேண்டும் என்று கூறி யிருக்கிறார். வட கொரியா குற்றவாளியாக இல்லாதிருந்தால் இந்தியா இவ்வாறு வலியுறுத்தி யிருக்குமா !

அமெரிக்கா கொரியாவில் தலையிடுவதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று, தென் கொரியா சமீப காலம் வரை அமெரிக்கப் பாதுகாப்பில் இருந்து வந்தது. தென் கொரியா கம்யூனிஸ்டுகளால் ஆக்கிரமிக்கப்பட்டால் பக்கத்திலிருக்கும் ஜப்பானுக்கும் சண்டை பரவக் கூடு மல்லவா ! இதுதான் அமெரிக்கரின் காரணம். இன்னொரு காரணம், ஐ. நா. வின் தீர்மானம். இப்பொழுது தென் கொரியாவிற்காகச் சண்டை போடும் படைகள் ஐ. நா. வின் படைகள் என்றே அழைக்கப் பெறுகின்றன. அவர்கள் அமெரிக்கப் படைகள் எனினும் சர்வதேச நலனுக்காகப் போராடுகின்றனர். உயிரையும் நீக்குகின்றனர். அதனால் ஐ. நா. வின் தீர்மானத்தை அனுசரித்தே அமெரிக்கா நடக்கிறது.

கடிதம் எழுதிய அன்பர் மேலும் வட கொரியா, நாட்டில் பெரிய நன்மைகள் செய்திருப்பதாயும் தென் கொரியா சர்க்கார் மிகவும் ஊழல் என்றும் கூறி ஆண்ட்ரூ ராத் அவர்களின் கட்டுரையைச் சுட்டிக் காட்டுகிறார். இதனால் வட கொரியா தென் கொரியா மீது படை யெடுப்பது நேர்மையாகுமா ! பிரிட்டிஷ் பிரதம மந்திரி கூறி யிருப்பது போல் ஒரு மனிதன் மிகவும் மோசமானவனாய் இருக்கிறான் என்பதால் அவனைக் கொன்று விடுவது தகுதியாகுமா !

நம் அன்பர் மற்றும் ஒரு விந்தையான விஷயத்தைக் கூறி யிருக்கிறார், ரஷ்யா வட கொரியாவிற்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ உதவி செய்யவில்லை என்று. உலகிலேயே மிகப் பலம் பொருந்திய அமெரிக்கப் படைகளையும், ஆயுதங்களையும், விமானங்களையும் முறியடிக்கும் சக்தி வட கொரியர்களுக்கு எங்கிருந்து வந்தது ! உலகிலேயே அமெரிக்கரை எதிர்க்க வல்லமை படைத்தோர் ரஷ்யர்தான். அவர்களுடைய தளவாடங்களும், விமானங்களும் தான் இப்பொழுது அமெரிக்கரை முறியடிக்கின்றன என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. ரஷ்யர்களின் வெகு நாள் பயிற்சிதான் வட கொரியருக்கு இவ்வளவு தைரியத்தையும் பலத்தையும் கொடுக்கிறது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இதை மறைமுகமான உதவி என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது ! தாங்கள் சொன்னதுபோல் சமாதானத்தின் சாவி ட்ருமனிடமும் ஸ்டாலினிடமும் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இப்பொழுது ட்ருமனைவிட ஸ்டாலினே சமாதானத்தைப் படுகுழியில் தள்ளுவதிலிருந்து மீட்கக் கூடியவர். அவர் ஒரு வார்த்தை சொன்னால் வட கொரியர் மரியாதையாக 38 வது அக்ஷ ரேகைக்குப் பின் வாங்குவார்கள். ஆனால் அவர் சொல்வாரா !

கடைசியாக ஒரு வார்த்தை. நம் நாடு கொஞ்சமாவது உற்பத்தியை அதிகப்படுத்தியதற்குக் காரணம் அமெரிக்கரின் உதவியால் தான் என்றால் மிகையாகாது. அங்கு இந்திய மாணவர் நூற்றுக் கணக்கான பேர் பயின்று இந்தியாவின் கௌரவத்தையும், அந்தஸ்தையும் உயர்த்துகின்றனர் ; இன்னமும் உயர்த்துவர். நம் நாட்டு மேதாவிகளையும் தம் நாட்டினுள்ளே விட மறுக்கும் ரஷ்யா நமக்காகக் காலணாவுக்கு உபயோகமான காரியம் செய்யவும் இல்லை; நாம் கேட்கவும் இல்லை. ஆகையால் இதை உணர்ந்து, நம் நண்பரை தயைசெய்து அமெரிக்கரை அவசியமில்லாமல் துவேஷிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை
31—7—50

ஆர். வெங்கடராமன்

---



"பாருங்கள் ஸார் ! இந்த ஒரு வாரத்தில் இரண்டு பவுண்டு நிறை குறைந்து விட்டேன் ! ஆயினும் உணவு மந்திரி முன்ஷி இன்னும் 'இந்தியாவில் உணவுப் பஞ்சம் இல்லை' என்று பிடிவாதமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார் !"

## வாலிபர்கள் பயம்

**உ**ணவுப் பொருளாக நாம் பருத்திக் கொட்டையை உபயோகிக்கலாம் அதில் சத்து உண்டு என்பதை அறிவித்த மத்திய சர்க்கார் உணவு மந்திரி ஸ்ரீ கே. எம். முன்ஷியின் பேச்சை ஜூலை மாதம் 30-ந் தேதி 'கல்கி' "அக்கப்போர்" பகுதியில் வெளியிட்டு, அத்துடன் உவமானமாகக் கண்டிருந்த கதையை அவர் அறிந்தால் அவர் கீழ்வரும் அவசரச் சட்டம் ஒன்றை அவசர அவசரமாகப் பிறப்பிக்கலாம்.

அதாவது காதலால் உணவின் ருசியை மறக்க முடியும் என்பதை அக் கதையிலிருந்து கிரஹித்த அவர், இருபது வயதுக்கு மேற்பட்ட எல்லா வாலிபர்களும் கண்டிப்பாகக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்றும், அவ்விதம் புதிதாய்க் கல்யாணம் செய்த அவ்வளவு வாலிபர்களுக்கும் ஏழு அவுன்ஸ் பருத்திக்கொட்டை உணவாகக் கொடுக்கப்படுமென்றும், அதை உண்ணும்பொழுது காதலிகள் காதலர்கள் எதிரிலிருந்து காதல் விஷயமாக, இனிமையாய்ப் பேசவேண்டும் என்றும் ஒரு அவசரக் கட்டாயச் சட்டம் வந்துவிடுமோ என்று என்போன்ற கல்யாணமாகாத வாலிபர்கள் பயப்படலாம்.

பூனா
31—7—50 ரா. ராமஸ்வாமி

○●○

## பத்தாம் ஆண்டு

'ஒன்பது வருஷங்கள்! எவ்வளவு நீண்ட காலம்!' என்று தோன்றுகிறது. 'ஆனால் எவ்வளவு விரைவில் கழிந்துவிட்டது!' என்றும் தோன்றுகிறது.

"கல்கி" பத்திரிகை ஆரம்பித்த காலத்தில் நான் மிகவும் சிறுவன்; பதினொரு வயது. இந்த ஒன்பது வருஷ காலத்தில் நான் பலவிதப் படிப்புகளை முடித்துவிட்டு, ஓர் உத்தியோகத்திலும் அமர்ந்து விட்டேன். வாழ்க்கையில் பல மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன.

ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் மாறுதல் இல்லை. அதுதான் 'கல்கி' படிக்கும் வழக்கம்—இல்லை, அதிலும் ஒரு சிறு மாறுதல் — முன்பு இரவல் படிப்பு; இப்பொழுது சொந்தமாக பெருமையுடன் வாங்கிப் படிக்கிறேன்.

சற்று நிதானித்துப் பார்த்தால்தான் இதன் முழு அர்த்தமும் தெரிகிறது. வளரும் சந்ததியின் அறிவையும் சிந்தனையையும் போக்கையும் ஓர் ஸ்டார்தரக் 'குடும்ப'ப் பத்திரிகை எவ்வளவு தூரம் பாதிக்கிறது என்பதை உணர முடிகிறது.

இந்தக் காலத்துப் பள்ளிக்கூடப் படிப்பினால் நான் தெரிந்துகொண்டது அதிகம் ஒன்றும் இருக்காது. ஆனால், 'கல்வி புகட்டுதல்' என்ற முத்திரை இல்லாமல், விளையாட்டாக, பொழுது போக்காக, உற்சாகமாக, உங்கள்—இல்லை,—நமது பத்திரிகை வாயிலாக நான் எவ்வளவோ அறிந்து கொண்டிருக்கிறேன். என் வாழ்க்கை ரசனைகளையும் போக்கையும் அது பெரிதும் நல்ல முறையில் திருப்பி யிருக்கிறது.

அரசியல், சமூகம், கல்வி, இலக்கியம், கலை, குடும்பப் பொறுப்பு முதலிய பல துறைகளில் நான் துளித் துளியாக நமது பத்திரிகை மூலம் தெரிந்து கொண்டது அனந்தம்.

வாழ்க்கையில் இன்றியமையாத விஷயம் பிற மனிதர்களுடன் பழகுவது அல்லவா! வாழ்க்கையைப் படித்தபின் பலவித குணசித்திரங்களுள்ள மக்களை **நிஜ** வாழ்க்கையில் சந்திக்கும் போது பிரமிப்புத் தட்டுவதில்லை. சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி நடந்துகொள்ளவும் முடிகிறது.

இன்று ஒன்பது வருஷங்கள் முடிந்து, "கல்கி"க்குப் பத்தாவது வயது தொடங்குகிறது. இந்த ஒன்பது வருஷங்களில் மட்டும் "கல்கி" தமிழ்நாட்டுக்குச் செய்திருக்கும் தொண்டுகளைக் கணக்கிட்டு முடியாது.

என் குடும்பத்திலுள்ளவர்கள் எல்லாரும் "கல்கி" நேயர்கள். படிக்கத் தெரிந்தவுடன் "கல்கி" நேயராகப் போகும் என் சின்னத் தம்பி கூட இப்பொழுதே பத்திரிகை அட்டையை 'ஒரு கை' பார்த்து விடுகிறான்!

என் குடும்பத்தார் அனைவர் சார்பாகவும் "கல்கி"க்கு இன்று வாழ்த்துக் கூறுகிறேன்.

சென்னை
28—7—50 எம். எஸ். சீனிவாசன்

## எத்தனை டிக்கெட்?



கண்டக்டர்:—உங்களுக்கு எத்தனை டிக்கெட் வேணும், ஸார்!

பருத்த மனிதர்:— உன்னுடைய இஷ்டம்போல் கொடு, அப்பா!



# ருசிமிகுந்த ஓவல்டின்

தாய், தன் குழந்தைக்கு
இயற்கை முறையில்
பால் புகட்ட உதவிபுரியும்.

தாய்ப்பாலே குழந்தைக்கு சிறந்த உணவு. சிசுவின் நுட்பமான ஜீரண சக்திக்கு உகந்தபடி போஷாக்களித்து வளரச்செய்யவல்லது.

"ஓவல்டின்" அபரிமிதமாக, புஷ்டியான தாய்ப்பால் இடைக்கச்செய்யும். ஆகவே, கர்ப்பிணிகளுக்கும் சிசுக்களை போஷிக்கும் தாய்மார்களுக்கும் மிகுந்த பயன் அளிப்பதாகும்.

புஷ்டியும் ஜீவ சக்தியும் அளிக்கும் குணமுள்ள பழுத்த பார்லி மால்ட், உத்தமமான ஏட்டுப்பால், பிரத்யேகமாய் தயாரித்த கோக்கோ, மற்றும் மதிப்புவாய்ந்த இயற்கை பாஸ்படைட்கள், விடமின்கள் இவற்றின் சத்துக்கள் அடங்கியதாகவுள்ள பொருள்

இன்றே "ஓவல்டின்" சாப்பிட ஆரம்பித்து உங்களது குழந்தையின் எதிர்கால க்ஷேமத்திற்கு உதவுங்கள். இப்பெயர் கொண்டது நிஜ நன்றே.

# 'OVALTINE'

## ஓவல்டின்

உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்

வினியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




OV. 306.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

இதோ எழில்மிக்க ஏ. ஆர். சகுந்தலா தன் அழகிய சருமத்தைப்பாதுகாக்க ஏன்

# லக்ஸ் டாய்லட் சோப்பை

தேர்ந்தெடுத்திருக்கிறார் என்பதை கூறுகிறார்




''நான் லக்ஸ் டாய்லட் சோப்பை மிகவும் விரும்புகிறேன். சருமத்தைப்பாதுகாக்க சிறந்த முறை இந்த சுத்தமானதும் மிருதுவானதுமான சோப்பைத்தவறாமல் உபயோகிப்பதுதான் என்பதை நான் அறிவேன். அது சருமத்தை மிருதுவாக்கிப் பட்டுப்போல் மழமழப்பாக்குவதுடன் எல்லாவிதத்திலும் அழகுடையதாகச் செய்கிறது. மேலும், லக்ஸ் டாய்லட் சோப்பின் மனதை மயக்கும் பரிமளத்தையும் நான் மிகவும் விரும்புகிறேன்.''



இனிய மணத்துடன்
கூடிய இந்த வெண்மையானதும்
சுத்தமானதுமான சோப்
உங்கள் சருமத்தையும் வசீகரமாகச்செய்யும்

**ஸினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 246-172 TM